

The Chief Minister of Andhra Pradesh is seen presenting silk vasthrams to the Lord during Garuda Seva at Tirumala.



Chief Minister with his family, ministers and T.T.D. Officials.



Chief Minister of Andhra Pradesh visiting T.T.D. Garden Exhibition.



ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதேர்
விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ் ஸ்தல நித்ய வாஸ ரஸிகாம்
தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் |
பத்மாலங்க்ருத பாணிபல்லவ யுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதிகுணோ ஜ்ஜ்வலாம் பகவதீம்
வந்தே ஜகந்மாதரம் ||

தாமரை மலர்களை எப்போழுதும் கைகளில் ஏந்திக்கொண்டிருப்பதாலும் தாமரை மலரலே வீற்றிருப்பதாலும் நித்திய ஆனந்தமயமாக இருக்கும் லக்ஷிமிதேவி நம் தாய்; நம் தலைவி. அவள் ஸ்ரீநிவாசனுடைய மார்பில் நித்தியவாசம் செய்துகொண்டு அவனுடைய சீற்றத்தைத் தணித்து சாந் தத்தை உண்டாக்குகிறாள். நம்மிடத்திலும் அளவுகடந்த அன்புடன் இருக்கிறாள். ஆதலால், தவறு இழைத்து விட்டோம் என்று அச்சம் இல்லாமல் நம் தந்தையை திருவேங்கடவனை நாம் அடையலாம். அவ் வாறு அடைவதற்குக் காரணமாம் திருமகளை நான் வணங்குகிறேன். தாயை வணங்கிவிட்டுத் தந்தையிடம் செல்வதால் எனக்கு ஒரு பயமும் இல்லை.

ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி-

# ஸப்தகிரி


நவம்பர் - 1990

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 6


## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ பத்மாவதி தாயார் - திருச்சானூர்

2, 3 பக்கங்களில் : அண்மையில் திருமலை, திருப்பதி மற்றும் சித்தூரில் நடைபெற்ற தி.தி.தேவஸ்தான பொது நிகழ்ச்சிகளில் ஆந்திர முதல்வர் பங்கேற்ற போது

பின்னட்டையில் : திருச்சானூர் திருக்கோயிலின் உட்புறத்தோற்றம்


சிறப்பாசிரியர் .

திரு. எம். வி. எஸ். பிரஸாத்,
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம, திருப்பதி.

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் .

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதன் மனிதனாக மட்டும் எப்போது விளங்குகிறான். அவன் தூங்கும்போது என்றுதான் கூற வேண்டும் ஆம், தூக்கத்தில்தான் அவன் சிந்திப்பது இல்லை; உணர்ச்சிகளுக்கு ஆட்படுவதில்லை. அதனால்தான் அவன் அவனுக்கோ, பிறர்க்கோ, ஒரு பிரச்சனையாக விளங்குவதில்லை. அதுபோது உலகம் அமைதியில் தவழ்கின்றது. இந்த அமைதி தொடர வேண்டுமென்றால் தூக்கம் மனிதனுக்கு ஒரு நிரந்தரமானதொரு இயல்பாக அமைந்திடல் வேண்டும். ஆனால் இறைவனின் எண்ணம் மனிதன் ஜடமாக இருத்தல் வேண்டுமென்பது அல்லவே! கல்லிலிருந்தும், விலங்கிலிருந்தும் அவனைப் பிரித்து சிந்தனை எனும் உணர்வைத் தந்து அதனாற்றான் அவனை இயங்க வைத்து, தன் படைப்பின் பெருமையை தான் காணவே விரும்பினான்.

இறைவன் தமோ; சத்வ, ராஜஸ குணங்களின் அடிப்படையில் முறையே அசுரர்கள், தேவர்கள், மனிதர்கள் என்று மூன்று வகையாகப் பிரித்து, அவர்களுக்கென்று ஊர்த்துவ, அதோ, நர எனும் மூவுலகங்களையும் படைத்தான். தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் மறைத்தல், மறைதல், உருவம் மாறல் போன்ற சக்திகளைத் தந்து, மனிதனுக்கு மட்டும் இவை யாதும் அளிக்காது, அவனுக்கென்று நியம, நிஷ்டைகளை வகுத்து பல பிரச்சனைகளிடையே உழலச்செய்ததேன்? பக்தியாலும், முயற்சியாலும் வரம் பல பெற்று அரக்கர்கள் தேவர்களைத் துன்புறுத்த அரக்கர்களுக்கு .மறு பிறவி எனும் கொடுந்துன்பம் தந்திடும் வகையில் அவர்களை இறைவன் இம்மண்ணில்தான் அழித்தான். தங்கள் புகழினையும், பதவிகளையும் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் தேவர்கள், நர உலகத்தில் தவம் பல மேற்கொண்ட தவச்சிலர்களைச் சோதிக்க, அவர்கள் அதற்கான தண்டனையைப் பெற்றது இம்மண்மீதுதான். ஆனால் இறைவனின் இலட்சியம், இவ்வுலக உயிர்கள் படைப்பின் பெருமை அறிந்து, படைத்தவனின் அருமை தெரிந்து, நாளும் பக்தி மணங் கொண்டு, அதனாற்றான் இறைமைப் பண்புகளைப் பெற்று இறுதியில் படைத்தவனின் திருவடி அருள் பெற்று, பிறவிப் பெருங்கடலைக் கடக்கவேதான் ஆகும். அதனால்தான் இறைவன் மனிதர்களைப் பெருமைமிகு இம்மண்ணின்மீது படைத்தான்.

இவ்வாறு விருப்புற்றுத் தான் உருவாக்கிய மனிதனைக் கண்டு தானே வெறுப்புற்று நோக்கிடுமாறு அம் மனிதன் விளங்குவதேன்? ஒவ்வொரு மனிதனுள்ளும் இறைவன் இருக்கின்றான் என்று கூறிடும்போது அம்மனிதன் சில சமயங்களில் மிருகமாகச் செயல்படுவதேன்? உணர்ச்சி எனும் திரை ஒன்றினால் அன்பு, அறிவு, பொறுமை, தியாகம், உழைப்பு போன்ற நற்பண்புகளையும், வெறி, அறியாமை, கோபம், பேராசை, சோம்பல் போன்ற தீப்பண்புகளையும் இரு பக்கமாகக் கொண்டு, நாளும் கயிற்றின்மீது நடக்கும் கழைக்கூத்தாடியின் நிலையில் வாழுகின்றான். இதனால்தான் நிலை தடுமாறும் போதெல்லாம், குணம் கெடுகின்றான்; பின்னர் பிரச்சனைகளுக்குள்ளாகி, இறுதியில் இச்சமுதாயத்திற்கு தானே ஒரு பிரச்சனையாக அமைகின்றான்.

பிறப்பால் அசுரனானாலும் சிறந்த மக்கள் தலைவனாகவும், தத்துவ மேதையாகவும் திகழ்ந்த இராவணன் இறுதியில் காமம் எனும் குறையால் ஒரு மனிதனால் அழிந்தொழிந்தான். சிறந்த அறிவுடைமையும், தேர்ந்த தவ வலிமையும் பெற்றிருந்த பஸ்மாசுரன் பேராசை காரணமாக அறியாமையின் விளைவாகத் தானே தனக்கு அழிவைத் தேடிக் கொண்டான். தன் தமையன் இரணியாட்சன் இறந்தபோது யாக்கை நிலையாமைப்பற்றிக் கூறி சிறந்த வேதாந்தியாகத் திகழ்ந்த இரணியகசிபு யான், யனது எனும் மமதை காரணமாக, இரக்கமற்ற முறையில் தன் குருதியில் தானே குளித்தான். இது போன்றே சிறந்த வள்ளல் சக்ரவர்த்தி பலியானவன், தன் செருக்கால் புகழ்ச்சியின் மமதையால் தன் உலகம் இழந்தான். கடமையை பாசம் மறைத்ததால் திருதராஷ்டிரனுக்கு அப்பாசமே அவனுக்கு இறுதி வரை வேதனைய விட்டுச் சென்றது. இதுபோன்றே பல வாழ்க்கை உண்மைகளை, மனிதனின் பலவீனங்களை, அதனால் நேரும் அழிவுகளை நமது சமய இலக்கியங்கள் விளக்கிக் கூறியுள்ளன.

இதனாற்றான் நாம் பெறும் பாடம், நம் எழுச்சிக்கும், வீழ்ச்சிக்கும் அடிகோலுவது நமது மனமேயாகும் என்பதுதான். தேவர்களும், அசுரர்களும் நம் உள்ளத்தேதான் வாழ்கின்றனர். மனம் நடுவு நிலைமை தவறாது தூயதாய் விளங்க வேண்டுமென்றால் சிந்தனை தூயதாக அமைதல் வேண்டும். மதுவனத்தை அழித்த வானர வீரர்களுக்குத் தகுந்த தண்டனை வழங்க் வேண்டிய தலைவனான சுக்ரீவனே, சீதையைக் கண்ட மகிழ்ச்சியால்தான் அவ்வாறு நடந்து கொண்டனர் என்றுகூறி அவர்கள் செய்கைக்கு நியாயங்கற்பித்தச்செய்கை, இன்று பல அரசியல் தலைவர்களை இனங்காட்டுகிறது. தூங்கிக் கொண்டிருந்த உபபாண்டவர்களை நடு இரவில் கொன்றொழித்தவனும், உத்தரையின் கருப்பத்தில் இருந்த நிலையிலேயே பரிஷத்தை கொல்ல முயற்சித்தவனுமான அசுவத்தாமனே மேல் என்று கூறும்படி, ஆந்திர மாநிலத்தில் ஓடும் இரயிலில், பகற்பொழுதில் குழந்தைகள், பெண்கள் என்று பாராது, அவர்கள் தப்பவும் முடியாதபடி அடைத்து வைத்து அவர்களை உயிரோடு வைத்துக் கொளுத்திய ஒரு சிலரின் செய்கை அமைந்தது. இந்நிகழ்ச்சி நாட்டின் பல்வேறு பகுதிகளில் அண்மைக் காலமாக ஜாதி, மதம், மொழி, இனம், கட்சி எனும் பெயர்களால் நாளுக்கு நாள் பெருகிவரும் வன்முறைச் செயல்களுக்கு ஒரு உதாரணமாக விளங்கியுள்ளது. இத்தகுச்

(48-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

திருமலை பிரம்மோத்ஸவம் :

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் இவ்வருட வருடாந்திர பிரம்மோத்ஸவம் 21-9-90 முதல் 30-9-90 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 26-9-90 அன்று நடைபெற்ற கருட சேவை அன்றும், 29-9-90 அன்று நடைபெற்ற திருத்தேர் அன்றும், இறுதி நாளான 30-9-90 அன்று நடைபெற்ற சக்ரஸ்நானம் அன்றும் நாளும் ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொது மக்கள் திருமலையில் கூடியது இந்து சமயத்தின் பெருமையினையும், ஏழுமலையானின் புகழினையும் மேலும் சிறக்கச் செய்தது. 26-9-90 அன்று நடைபெற்ற 'கருட சேவை' விழா தென்னகத்தின் பக்தி சங்கமத்தின் பெருமையை விளக்கிக் கூறியது. அன்று இரவு, ஆந்திர மாநில அரசு சார்பில், ஆந்திர மாநில முதல்வர் டாக்டர். எம். சென்னா ரெட்டி அவர்கள், கோயில் உத்ஸவர்க்கு, வெள்ளித் தட்டில் ஏந்திய வண்ணம் கொணரப்பட்ட, பட்டுப் பீதாம்பரத்தைக் காணிக்கையாக்கினார். தொடர்ந்து, சென்னை திருப்பதி குடை அறநிலையக்குழுவால் வழங்கப்பட்ட ஒன்பது கோயில் குடைகள் கால் நடையாக சென்னையிலிருந்து திருமலை வரை ஊர்வலமாகக் கொண்டு வரப்பட்டு, கருட சேவை அன்று வாகன ஊர்வலத்தின்போது காணிக்கையாக்கப்பட்டன. மேலும் கர்னாடக அரசு சார்பில், இப்பிரம்மோத்ஸவத்தை முன்னிட்டு கஜராஜு எனும் யானை ஒன்று திருமலைக் கோயிலுக்குப் பரிசாக அளிக்கப்பட்டது. இப்பிரம்மோத்ஸவத்தின்போது திருமலைக் கோயில் மூலவர் புதியதாகச் செய்யப்பட்ட வைர முடி அணிந்து பக்தர்களுக்கு நல்லருள் ஈந்தார். இப்பத்து நாள் உத்ஸவத்தின்போது திருமலையில் காலையிலும், மாலையிலும் சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெற்றன. மேலும் திருமலையில் பல இடங்களில் தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீட்டுப் பிரிவு பல, சிறப்புத் தள்ளுபடி விற்பனை மையங்களைத் திறந்தது. இதனால் சுமார் ரூ. 70,000 பெறுமான தமிழ் உள்ளிட்ட மற்றைய மொழி சமய நூல்களை பக்தர்கள் வாங்கிப் பயனடைந்தனர்.

இப்பிரம்மோத்ஸவத்தினைக் காண, இதுபோது ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் மற்றும் ராஜஸ்தான் மாநில ஆளுநர். திரு. டி. பி. சடோபாத்யாயா ஆகியோர் தம் குடும்பத்தாருடன் திருமலைக்கு வருகை புரிந்தனர்.

திருமலை பிரம்மோத்ஸவ வருமானம் :

அண்மையில் திருமலையில் நடைபெற்ற ஒன்பது நாள் பிரம்மோத்ஸவத்தின்போது தேவஸ்தான மேலாண்மைக்குக் கீழ்வருமாறு வருவானம் கிடைக்கப் பெற்றது. உண்டி மூலமாக ரூ. 99.33 இலட்சமும், (கடந்த ஆண்டைவிட ரூ.18 இலட்சம் அதிகமாகும்) லட்டு விற்பனை மூலமாக ரூ. 36.69 இலட்சமும் (கடந்த ஆண்டைவிட ரூ. 3 இலட்சம் அதிகமாகும்) சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் விற்பனை மூலம் ரூ. 35.21 இலட்சமும் (கடந்த ஆண்டு ரூ. 23.57 இலட்சம்) பல்வேறு ஆர்ஜித சேவைகளை நடத்தியதால் ரூ. 30. 21 இலட்சமும் (கடந்த ஆண்டு 28. 2 இலட்சம்) ஆக மொத்தம் மொத்தம் வருமானம் ரூ. 1.91 கோடியாகும். இப்பிரம்மோத்ஸவத்தின்போது 4.63 இலட்சம் யாத்திரிகர்கள் திருமலைக் கோயிலுக்கு வருகை புரிந்தனர். (கடந்த ஆண்டு 4.45 யாத்திரிகர்கள் வருகை புரிந்திருந்தனர்.)

திருமலையில் முதல்வர் :

26-9-90 அன்று ஆந்திர மாநில முதல்வர் டாக்டர். எம். சென்னா ரெட்டி அவர்கள் தன் குடும்பத்தாருடன் திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று காலை திருமலையில் தி. தி. தேவஸ்தான தோட்டத்துறை உருவாக்கிய சிறப்பு மலர்க் கண்காட்சியினை முதல்வர் அவர்கள் திறந்து வைத்தார். அன்று மாலை தி.தி.தே. சமய நூல் வெளியீட்டுப் பிரிவு பிரசுரித்த புதிய 11 சமய நூல்களை வெளியிட்டார். 25-9-90 அன்று திருப்பதியில் ரூ. 3 கோடி செலவில் உருவாக்கப்படவிருக்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் நலவாழ்வு நிலையத்திற்காக அடிக்கல் நாட்டினார். 27-9-90 அன்று காலை திருச்சானூர்க்குச் சென்று ஸ்ரீ பத்மாவதி தாயாரைத் தரிசித்தார். இவ்வருகையின்போது திருமலைக் கோயிலிலும், திருச்சானூர் கோயிலிலும் முதல்வர் அவர்கள் தக்க கோயில் மரியாதைகளுடன் தி. தி. தே. உயர் அலுவலர்களால் அன்புடன் வரவேற்கப்பட்டார்.

திறப்பு விழா :

ஆந்திர மாநிலம் சித்தூரில் ரூ. 51 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்தை ஆந்திர மாநில முதல்வர். டாக்டர். எம். சென்னா ரெட்டி அவர்கள் 25-9-90 அன்று திறந்து வைத்தார். இச்சிறப்பு நிகழ்ச்சியின் போது ஆந்திர மாநில பஞ்சாயத் துறை அமைச்சர் திரு. ஆர். செங்கா ரெட்டி, உள்ளூர் சட்டமன்ற உறுப்பினர் திரு. சி. கே. பாபு பாராளுமன்ற உறுப்பினர் திரு. எம். ஞானேந்திர ரெட்டி, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத் ஆகியோரும் உடன் இருந்தனர்.

அமைச்சர் வருகை :

ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சராக அண்மையில் பதவி மேற்கொண்டுள்ள திரு. கனுமூரி பாபிராஜு அவர்கள் 9-9-90 அன்று தி. தி. தே. சிறப்பு நிர்வாகக் குழுவின் உறுப்பினராக பதவி பிரமாணஞ் செய்யப்பட்டார். அன்று நடைபெற்ற ஸகஸ்ர தீபாலங்கார சேவையில் பங்கு பெற்றார். 10-9-90 அன்று திருப்பதியிலுள்ள தி. தி. தே. நிருவாகக்கட்டிட வளாகத்தில் தி. தி. தே. ஊழியர்கள் சங்கம் ஏற்பாடு செய்திருந்த வரவேற்புக் கூட்டத்தில் பங்கு பெற்று உரையாற்றினார். அதற்கு முன்னதாக தி. தி. தே. மத்திய மருந்துவ மனையின் 30 படுக்கைகளைக் கொண்ட ரூ. 32 இலட்சம் செலவில் கட்டப்பட்ட விரிவு கட்டிடத்தினைத் திறந்து வைத்தார்.

(48-ம் பக்கம் பார்க்க)

# பஞ்ச பூதங்கள்

திரு. மாருதிதாஸன்
காஞ்சிபுரம்.

*முன்னுரை :*

உலக மக்கள் இன்பமாகவே வாழ விரும்புகின்றனர். இறைவனால் ஆக்கப்பட்டுள்ள பொருள்கள் அனைத்தும் உலக உயிர்களின் நலன்களுக்காகவும், இன்பத்திற்காகவுமே அமைந்துள்ளன. ஆனால் உயிர்கள் தங்கள் அறியாமையால் தாங்களாகவே அமைதியின்மையையும் துன்பத்தையும் தேடிக்கொள்கின்றன. அறிவுடையோர் இறைவனின் படைப்புகளான பஞ்ச பூதங்களையும், பிற உயிரினங்களையும் ஆச்சார்யராகக் கொண்டு அமைதியையும் ஆனந்தத்தையும் அடைகின்றனர்.

பஞ்ச பூதங்கள் நமக்கு ஆச்சார்யராக எவ்விதம் திகழ்கின்றன என்பது குறித்துச் சிறிது காண்போம்.

**பூமி :**

பஞ்ச பூதங்கள் எனப்படுபவை நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. அவற்றுள் முதன்மையானது பூமி. முதற்குருவாகப் பூமியைக் கொள்வர் சான்றோர்.

முக்திக்கு வித்தாவது சாந்தி. சாந்திதான் முக்தியடைய முயல்வோருக்கு முதன்மையானதாகவும், முக்கியமானதாகவும் உள்ளது. சாந்தியை நாம் அடையப் பூமியையே முதற்குருவாகக் கொள்ளுதல் வேண்டும்.

பூமியைப் பங்குபோட்டு என்னுடையது, உன்னுடையது என்று எண்ணி உரிமை கொண்டாடிச் செல்வந்தர்கள் என்று செருக்கு கொண்டாடிப் பங்கு போட்டுக்கொள்கிறோம். என்றாலும், பூமியானது நாம் செய்கின்ற பின்னத்தால் பின்னமடையாது. பூரணமாகவே நிலைத்து நிற்கிறது. ஞானியும் உலக விவகாரங்களால் பின்னமடைந்தவன்போல் காணப்பட்டாலும், தன்னுடைய பரிபூரண நிலையிலிருந்து மாறவே மாட்டான்.

பூமியைச் சிலர் வணங்குவர். சிலர் மல ஜலம் போன்றவற்றால் களங்கப்படுத்துவர். என்றாலும், பூமியானது மகிழ்ச்சியையோ துக்கத்தையோ அடைவதில்லை.

> "ஏய நன் மாலை வேயினும் அதன் மேல்
> மனவிருப்பெய்தி மகிழவும் வேண்டா
> யாக்கையை ஒருவன் தாக்கி உதைப்பினும்
> கோப தாபம் கொள்ளவும் வேண்டா

என்னும்படி ஞானியரும் எப்பொழுதும் ஒரே நிலையில் இருப்பர்.

நெருப்பால் எரித்தாலும், கலப்பையால் உழுதாலும், காலால் மிதித்தாலும் அது கோபம்கொள்வதில்லை. தனக்குத் தீமை செய்பவர்களின் தவறையும் பொறுத்து, அவர்கள் வாழ்வதற்குரிய தானியங்கள் முதலானவற்றைத் தந்து வாழ்வளிக்கின்றது.

துன்பத்தைச் செய்பவர்க்கும் இன்பத்தையே அளித்து வாழ்வளித்து வழி காட்டுகின்றனர் ஞானவள்ளல்கள்.

அபகாரிக்கும் உபகாரம் செய்வதே சாந்தியைத் தரும். அந்தச் சாந்தியைப் பெற பூமியை நாம் குருவாக ஏற்றுக்கொள்ள வேண்டும்.

பூமியினால் உண்டானவை மலைகள். மணிகள், கனிகள், பழங்கள், சுனை நீர் எனப் பலவகையிலும் மலைகள் உயிர்களுக்கு உபகாரம் செய்கின்றன. ஆயின், அவை பிரதியுபகாரமாக நம்மிடம் எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஞானியும் அவ்வாறே தன் மனோ வாக்கு காயங்களால் உதார குணத்துடன் என்றும் நிற்கிறான்.

மலைகள் மீது கடவுளர்கள் குடி கொண்டு நம்மையெல்லாம் காப்பது போல், உபகாரியாக விளங்கும் ஞானியர்களிடம் தேவர் மூவர் முதலானோர் குடிகொண்டு அவருக்கும் நமக்கும் குறைவேதும் வராதபடிக் காத்து நிற்பர். எனவே, பூமியைப் போலவே மலையையும் குருவாகக் கொள்ளல் வேண்டும்.

பூமி, மலைகள் மீது மரங்கள் வளரும். மரங்களும் ஞானாசிரியரே! மரங்கள் தம்மை வெட்டுபவர்க்கும் நிழலைத் தந்து உதவும். தன் நிழல் கீழ் யார் வந்தாலும் அவர்களை விருந்தினராக ஏற்று வஞ்சனையில்லாமல், இலை, பூ, காய், கனி, நிழல், விறகு முதலானவற்றைக் கொடுத்து உபசரிக்கும். ஞானியும் அவ்வாறே யாவர்க்கும் உபகாரியாக இருந்து உதவி வருவான்.

எனவே, பூமியும் பூமியால் உண்டாக்கப்படும் மலைகளும் மரங்களும்

நமக்குச் சாந்தியைக் கற்பிக்கும் ஆச்சார்யராக விளங்குகின்றன.

**காற்று :**

காற்றுதான் உயிர்களுக்கும், தேவர்களுக்கும் பிராணனாயிருக்கிறது. காற்று நின்றுவிட்டால் பன்றி முதலான உயிர்களிலிருந்து தேவர் வரைக்கும் இயக்கமே நின்றுவிடும். அரசனைக் காப்பாற்ற வேண்டும் என்பதும், ஆண்டியைக் கைவிடல் வேண்டும் என்பதும் காற்றுக்கில்லை. மண் குடிசை முதல் மாளிகை வரை அது ஒரே விதமாக வீசும். காற்றுக்குப் பேதமில்லை. அவ்வாறே ஞானிக்கும் பேதமில்லை.

காற்று பின்னப்பட்டதுபோலத் தோன்றிடினும், ஒரே தன்மையாகவே இருக்கும். தன்னிடம் கலக்கப்பட்ட பொருள்களால் காற்று மாறுபாடு அடைவதுபோலத் தோன்றும். ஆனால், அது என்றும் தன்னியல்பிலேயே நிலைத்து நிற்கும். ஞானியும் உலக நடப்புக்களால் கிரகிக்கப்பட்டவன்போலக் காட்சியளிப்பினும் அவன் என்றும் தன் இயல்பான குணத்திலிருந்து மாறுபடுவதில்லை.

ஒருவன் ஐம்புலன்களுக்கு வசப்பட்டானாயின் அவனைப் பல்வேறு குணங்கள்பற்றிக்கொள்ளும். அதனால் அவன் என்றும் துன்பத்தையே அடைவான். ஐம்புலன்களுக்கு ஆட்படாதவனை எவ்விதக் குற்றங்களும் அணுகா. சந்தனம், பெண்கள், பூக்கள் முதலானவற்றின் மேல் மோதினாலும், காற்று பரிசுத்தமாக நிற்பது போலவே, ஞானியரும் உலக நடப்புகளில் பங்கு பெற்றாலும் தாமரை இலைத் தண்ணீர்போலவே சம்பந்தமற்றிருப்பர்.

எனவே, காற்றும் ஞானியராக முயல்வோருக்கு ஆச்சார்யனாய் அமைதலைக் காண்கிறோம்.

**ஆகாயம் :**

பிறவற்றின் சேர்க்கையின்மை, எவற்றாலும் மாறுபாடின்மை, குற்றமின்மை ஆகியவை ஆகாயத்தின் குணங்கள். பகையும், உறவும் வானுக்கில்லை. ஆகாயம் மிகவும் பெரியது. ஞானியரும் வானின் குணத்தைப் பெற்று உயர்ந்து நிற்பர். ஆகாயம் எல்லாவற்றையும்விட உயர்ந்து நிற்கிறது. அதே நேரத்தில் பூமியைத் தொட்டு நிற்பதுபோல் தோன்றுகிறது. இறைவனும் எல்லா உயிர்களிடமும் கலந்து நிற்பவனாயினும் வானைப்போல் உயர்ந்தே காணப்படுகிறான். இந்தத் தத்துவத்தை ஞானியர் ஆகாயத்திடமிருந்து கற்கின்றனர். ஆகாயத்திற்கு நீர், நெருப்பு முதலிய எவற்றாலும் தாக்கம் ஏற்படுவதில்லை. ஞானியரும் எத்தகைய பூதங்களாலும் தாக்கப்படுவதில்லை.

ஆகாயத்திற்கு ஒருவன் வண்ணம் பூச முயல்வானேயானால், அது இயலாததாகி அவன் கையையே அசுத்தப்படுத்தும். ஞானியர்மேல் பழி கூற நினைப்பவனும் முடிவில் தானே அப்பழிக்கு ஆளாகித் துன்புறுவான்.

பூமி, நீர், நெருப்பு, காற்று முதலியவற்றால் ஆகாயம் வேறுபாடடையாது. இடி முழக்கம் ஆகாயத்தில் உண்டாயினும் ஆகாயம் அதனால் அதிர்ச்சியுறுவதில்லை. அவ்வாறே ஞானியரும் உலக நிகழ்ச்சிகள் எவற்றாலும் பாதிக்கப்படுவதில்லை.

உயர்வு, கலக்கமின்மை, மாறுபாடின்மை, குற்றமின்மை ஆகியவற்றைப் பெற முயலும் ஞானியர் ஆகாயத்தை ஆச்சார்யராகக் கொள்வர்.

**நீர் :**

நீரின் தன்மை குற்றமற்ற நிலையுடையது. தனக்கென்று எவ்விதச் சுவையையும் அது இயல்பில் பெறுவதில்லை. உலக உயிர்கள் அனைத்தின் உயிர் வாழ்தலுக்கும் அது உயிராய் அமைந்துள்ளது. தானும் உணவாகிறது. உணவுப் பொருள்களை உண்டாக்கக் காரணமாகவும் அமைகிறது. பொருள்களின் அழுக்கைப் போக்க நீரே உறுதுணையாகிறது. தாகத்தைத் தணிக்கவல்லது நீர் ஒன்றே.

ஞானியரும் குற்றமற்ற தன்மையுடையவராய் இருப்பர். தமக்கென்று அவர்கள் எவ்வித இன்பத்தையும் அனுபவிப்பதில்லை. உயிர்களின் உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய உபாயங்களைக் கூறி உய்யும் நெறியை அளிப்பர். மக்களின் மன அழுக்கைப்போக்கி ஞான வேட்கையைத் தணிப்பர்.

நீர் புனிதமானது. எனவேதான் அது கடவுளாக மதிக்கப்படுகிறது. கடவுளர் திருமேனிகட்குத் தெய்வத் தன்மையை ஏற்றக் குடமுழுக்கு செய்யவும் புனித நீரே தேவைப்படுகிறது. புனித நீர் நம் பாவத்தைப் போக்குகிறது. ஞானியரும் புனிதமானவர்கள். அவர்கள் கடவுளாக மதிக்கப்படுகின்றனர். அவர்களின் அருள் வாக்கு நம்மைப் புனிதப்படுத்துகிறது.

குற்றமற்ற தன்மையைக் காட்டி வாழ்விக்கும் நெறியை உணர்த்தி, புனிதத்தன்மையால்தெய்வநிலையையும் அடையலாம் என்பதை உணர்த்தும் நீர் நமக்கெல்லாம் வாழும் வழி காட்டும் ஒப்பற்ற குருவாகத் திகழ்கிறதன்றோ!

**நெருப்பு :**

நெருப்புக்கு உருவமில்லை. ஆயினும் தான் பற்றிக்கொண்ட பொருளோடு எரியும்போது உருவத்தைப் பெற்றதுபோல் காணப்படுகிறது. அது நீண்டும் உருளையாயும் ஒளிரும். மேல்நோக்கிமட்டுமே எரியும். அது என்றும் கீழ்நோக்கிப் பிரகாசிப்பதில்லை.

ஞானியரும் ஏதோ ஓர் உருவில் காணப்படினும் அவர்களுக்கென்று ஓர் உருவம் இல்லை. அவர்கள் உள்ளத்தில் பற்றி எரியும் ஞானம் என்றும் மேல்நோக்கி ஒளிருமேயன்றிக்

கீழ்நோக்கிப் பார்க்கும் பார்வையாக இராது.

தீ சிறிதாயினும் பெரியதாயினும் சக்தி ஒன்றே! ஞானியருள்ளும் சிறிய வர் பெரியர் என்று அளவில் பேதம் இல்லை.

ஓமத்தீ தன்னிடம் அளிக்கப்படு கின்ற அவியுணவை எந்தெந்தத் தேவதைக்குச் சேர்க்க வேண்டுமோ அவ்விதம் செய்கிறது. ஞானியரும் தன்னை அடைந்தவர்களை எந் தெந்த மார்க்கத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுமோ அவ்விதமே செய்வர். விறகுக்குள் தீயானது மறைந்து காணப்படுதலைப்போல் ஞானியரும் தங்களை மறைத்துக் கொண்டே வாழ்வர்.

நெருப்பில் இடப்பட்ட அழுக்கு நெருப்பினால் எரிக்கப்பட்டுத் தூய் மையாகிறது. ஞானியரை அடைந் தவரின் குற்றங்களும் எரிக்கப்பட்டுத் தீயவரும் தூய்மையடைகின்றனர்.

நெருப்பு தன் ஒளியால் பிரகா சிக்கப்பட்டுத் தன்னை யாரும் அண்ட விடாமல் தனித்தே ஒளிர்கிறது. ஞானியரும் உலக பாசங்களால் தீண் டப்படாமல் தனித்தே சுடர்விட்டு நிற்பர்.

இவ்வாறு நெருப்பானது தூய்மை நெறியில் வாழும் நெறி முறைகளைப் போதிக்கும் குருவாக விளங்குகிறது.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகா யம் இவை ஐந்தும் வெறும் பூதங்கள் மட்டுமன்று. மக்களுக்கு வாழ வேண் டிய நெறிகள் பலவற்றை உணர்த்தி நின்று உண்மைகளை எடுத்துரைக் கும் குருமார்களாக விளங்குகின்றன.

முக்தி பெற விழைவோர் இங் ஙனம் பெரும் பூதங்கள் உணர்த்தும் உண்மைகளை உணர்ந்து உய்தி பெறுவாராக!



# மன்ரோ செய்த பாக்கியம்

சென்னை மாநில செட்டில்மெண்டு அதிகாரியாக அன்று விளங்கிய தாமஸ் மன்ரோ என்ற ஆங்கிலேயர் ஸ்ரீராகவேந்திர சுவாமிகள் ஜீவபிருந் தாவனம் கொண்டிருக்கும் மந்த்ரா லய கிராமத்தைப் பார்வையிட புறப் பட்டுச் செல்லுகிறார். மந்த்ரால யம் வந்தவுடன் சுவாமிகளின் பிருந் தாவனத்தை தரிசனம் செய்திட முனைகிறார். தன்னுடைய அலு வலர்கள் புடைசூழ ஸ்ரீ சுவாமிகளின் பிருந்தாவனத்திற்கு முன் பெரும் பர வசத்துடனும் பாசத்துடன் வந்து வணங்கி நிற்கிறார்.

மந்த்ராலயம் கிராமம் முழுவதும் பிருந்தாவனத்துக்குச் சொந்தமான பூமியாகும். பிருந்தாவனத்துக்குத் தேவைப்படும் இடம் போக எஞ்சி யுள்ள இடத்தை அரசுடைமை ஆக்கு வது என்று அன்றைய ஆங்கிலேய ஆட்சி முடிவு செய்தது. அம்முடிவை செயல்படுத்துவதற்கு முன் அங்கு நேரில் சென்று அங்குள்ள மக்களின் கருத்தை அறிய அரசு எண்ணியது. எனவே சென்னை மாநில செட்டில் மெண்டு அதிகாரியை அங்கு அனுப் பியது. அவரே தாமஸ் மன்ரோ.

அவர் ஸ்ரீ சுவாமிகளின் பிருந்தா வனத்திற்கு முன் வந்து நின்றவுடன் ஸ்ரீராகவேந்திரர் அங்கு அவருக்கு நேரில் காட்சி கொடுத்தார். மந்த் ராலய கிராமம் முழுவதும் பிருந்தா வனத்திற்கு உரிமை இருப்பதையும் உபயோகத்தில் இருந்து வருவதையும் ஆணித்தரமாக எடுத்துரைத்தார். மந்த்ராலய கிராமத்தின் எந்த ஒரு பகுதியையும் அரசுடமை ஆக்குவது கூடாது என்பதனைக்கூறிமுடித்தார். ஸ்ரீ சுவாமிகள் அருளிய அரிய காட்சி யினையும், இனிய உரையாடலையும் தாமஸ் மன்ரோ மட்டிலுமே அறிந் திட முடிந்தது.

ஸ்ரீ சுவாமிகளின் விளக்கத்தை முழுவதும் ஏற்று தாமஸ் மன்ரோ அவ்வாறே அரசுக்கு அன்றே பரிந் துரை செய்து அனுப்பினார்.

மந்த்ராலயம் முகாம் முடிந்த வுடன் சென்னை திரும்பிய தாமஸ் மன்ரோவுக்கு சிறிது காலத்துக்குள் பெரும் பதவி உயர்வு கிடைத்தது. சென்னை மாநிலத்தின் கவர்னராக அவர் பதவி பெற்றார். ஸ்ரீ சுவாமி களின் திருவருளே தனது பதவி உயர் வுக்குக் காரணம் என்பதை அவர் முற்றிலும் நம்பினார். பதவி ஏற்ற தும் அலுவலகம் சென்று அரியணை யில் அமர்ந்தார், தன் எதிரில் மேஜை மீது காத்துக்கிடக்கும் கோப்புகளைக் கண்ணுற்றார். முத லில் கிடைத்தக் கோப்பினை கையில் எடுத்து பிரித்துப் பார்க்கிறார். "ஸ்ரீராகவேந்திர சுவாமிகள் பிருந் தாவனத்துக்கு மந்த்ராலய கிராமம் முழுவதுமே பயன்பட்டு வருகிறது. அதை அரசுடைமை ஆக்குதல் கூடாது" என்று தான் பரிந்துரை செய்த அந்த கோப்பு அதுவே என அறிந்து பெரும் வியப்பை அடைந் தார். விம்மிதம் அடைந்தார்.

சென்னைத் தீவுத் திடலில் சர் தாமஸ் மன்ரோவின் உருவச் சிலை பேசும் பொற்சிலையாய் காட்சி தந்து கொண்டு இன்றும் நம்மை பரவசத் தில் ஆழ்த்தி வருகிறது. அந்தப் புண்ணிய மூர்த்தியின் உருவச்சிலை யைக் காணும் போது நம் உள்ளம் இன்பகீதம் பாடுகிறது, உடல் ஆனந்த நடனம் ஆடுகிறது.

திரு. ஆர். சுப்பராவ்
திருக்கோவலூர்.



தொடர் கவிதை

# திருவேங்கட நூற்றந்தாதி

## நேரிசை வெண்பா

கொழிக்கும்குறை காண்மின்கள் கண்டிடா தோடும்
கொழிக்கும்நற் செல்வம் களிப்பாய்-கொழிப்பான்பொன்
வேங்கட மாளும் மணிவண்ணன வாழ்வினில்
தீங்கில்லை உள்நினைத்தார்க்கு

நினைத்த தருணத்தில் நீண்டங்கு நின்றான
கனைத்த கரியொலி கேட்டான் - முனைந்து
திகிரி செலுத்தியதன் துன்பம் சரித்தான்
பகர்வோம்நம் பெம்மானின் பேழ்

பேழ்கணிப்பார் நெஞ்சிற் புகுந்து திரிந்திடுவான்
தாழ்வாரா கில்அவன்றன் தாள்களை - வாழ்வாரார்
மற்றுவீழ்வார் யார்அவரை மேவும் செயல்களுக்குச
சுற்றாகி சூழும் சுடர்

சுடர்மால் சுடர்பவை தன்னுள் சுடர்மால்
கெடலூழ் கெடுக்கும் கருமால் - படர்ந்தே
அலைவெளிர் ஆழி அயிலும்மால் ஒணமா
மலையில் அடர்ந்திரும் மா்ல்

மால்மால் எனஅவனை மாளாது சாற்றுவோர்தேன்
பால்தான் எனஇனிக்கும் பேரருளான - ஆல்இலை
ஒன்றில் அணியாக ஒன்றிய கண்ணனோர்
பொன்றாக் கருணைப் பெருக்கு

பெருநீர் முழங்குதல் பேரொலி போலநாற்
பெருமறை பேசும் பரமன - பெருந்தவ
நோக்கில் புலப்படும் நாரணன் நானிலம்
காப்பான் குழுமிக் கலந்து

கலந்தூர்வார் நெஞ்சினிற் கேசவனை எண்ணி
மலர்ந்தூர்வார் மாலின் வனப்பில் - இலந்தூர்வார்
நல்குரவை நன்றாய் நிலந்தேய்ப்பான் நீள்மால்சீர்
பல்வகையாய் பூரிப்பான பார்

பார்வைக்குள் எட்டாதான் பாரிருக்கும் எந்தவொரு
தீர்வைக்குள் திட்டமாய்த் தட்டாதான் - சார்கின்ற
அத்தனையும் வெட்டாதான் ஆர்கலியை ஒட்டாதான்
தித்திக்கும் வேங்கடத் தே

தேனாகி தேனிரும் தீம்பூவென் றாகியவை
தானிரும் கானாகி சோலையாகி - கோனாகி
பாருள் நிலைத்திரும் பூவண்ணன் நேமியே
சீரினைச் சொல்லிச் சுழல்

சுழல்கின்ற கோள்களுக்கும் தண்மா மதிக்கும்
சுழலும கதிரோன் தனக்கும் - சுழல்கின்ற
தன்மைதனைத் தந்த திருமலை யான்நமக்கு
நனமையே நல்குவான் நாடு

நாடுவோர்க் கினபம் நயப்பான்இந் நானிலத்தில்
தேடிடு வோர்க்கினிமை தந்திடுவான் - பாடும்
புவியோர் பொலிவார் பெருமாள் கருணை
அவன்நாமம் ஆதர வாம்

ஆதரவாம் இமமைக்கும ஆன்ற மறுமைக்கும்
சோதரனாம் தந்தையாம் சுற்றமாம் - சீதரனென்
செங்கண்மால் தன்னைத் திருமலை காண்கினில்
அஙகமெல்லாம் துள்ளாதோ ஆர்த்து

ஆத்தலையும உள்ளகமும் ஆள்வினையால் அச்சத்தால்
வேர்த்தலைநது வீணாகும் வாணாளும் - நீர்திரளும்
நீராழி வாழ்வான் நசிப்பான் நெஞசகமே
ஆளரியைச் சென்றே அடை

அடைக்கலமாய் ஆகிநம்மை ஆட்கொள்வான் அடியார்
கிடைகுலவி காதற் கிடப்பான் - படைக்கலனால்
சிந்திவன் தீயோர் சரித்திடுவான் வேங்கட
வேந்தனே வாழ்வின் விளக்கு

விளக்கமாக்கி மாளாது விண்ணோன் பெருமை
விளக்கமவன் என்னிலது வாய்மை - விளக்காம்
அறிவுச் சுடரேற்றும் அச்சுதன் கோன்மை
செறியூழி அணுகா தடம்

தடந்தோள் சுழல்கின்ற செஞ்சுட ராழி
கெடுக்கும் வினைகளோ கோடி - இடர்களும்
மேவுகின்ற அச்சமும் மாயுமெம் மாயவன்கை
ஏவுகின்ற ஆழியி னால்

ஆழியான் நின்றனக் காள்வினையால் வேள்வியினில
தாழ்வினைச் செய்யத் துணிந்தானின் - வாழ்வழிய
வெய்யகதிர் ஒக்குமோர் வெந்திகிரி எய்தனைஎம்
கொய்யும் துயரைக் கடி

திரு. வி. ஆர். ஸ்ரீநிவாஸ இராகவன், M.SC.,
சென்னை-44.

(தொடரும்)

# பேராழி வண்ணனைப் பாடிய பேயாழ்வார்

திரு. வே சோமசுந்தரம்
சென்னை-61.

" திருக்கண்டேன் பொன்மேனி கண்
டேன் திகழும்
அருக்க னணிநிறமும் கண்டேன-
செருக்கிளறும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம்
கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று"

(மூன்றாந்திருவந்தாதி முதல் பாடல்) என்ற பேயாழ்வாரின் பாடல் வைணவர்களுக்கு நம்பிக்கை ஒளியூட்டும் சிறப்புடையதாகும். நாம் வணங்கும் தெய்வத்தை நம் கண்ணெதிரேயேக் காணப் பெறுவதென்பது சாதாரண நிகழ்ச்சியல்ல. உலக வரலாற்றை எடுத்துப் பார்த்தோமானால் இறைவனை நேரில் கண்டு பேசிக் களிப்புறும் திரு வாய்க்கப் பெற்றிருந்த பெருமக்கள் மிகச் சிலரேயாவர். அண்மைக் காலத்தில் அவ்வாறு இறைவனோடு அன்றாடம் தாம் அளவளாவி மகிழ்ந்த தோடன்றி தம் சீடரான விவேகானந்தருக்கும் கடவுட் காட்சி நல்கி அருள் புரிந்த ஞானி ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சராவர். அவருக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய நம் பேயாழ்வாரும் திருமாலை நேரே தரிசிக்கும் பேற்றைப் பெற்றிருந்தார். திருக்கோவலூரில் மிருகண்டு முனிவரின் வீட்டு இடைகழியில் பொய்கையாழ்வாரோடும், பூதத்தாழ்வாரோடும் ஒரு நாளிரவைக் கழிப்பதற்காக ஒதுங்கி நின்றிருந்தார் பேயாழ்வார். ஏற்கெனவே அந்த இடம் மூன்று முதலாழ்வார்களான அம்மூவர் மட்டுமே நிற்க இடமளிப்பதாய் இருநதது. திடீரென்று யாரெனத் தெரியாத நான்காமவர் அவ்விடத்தில் ஒதுங்கி, மூன்று ஆழ்வார்களையும் நெருக்குவதைப் போல அவர்கள் உணர்ந்தனர். அவர் யாராய் இருக்கும் என்றறியும் ஆர்வத்தோடு பொய்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும் பைந்தமிழ்த் துணை கொண்டு விளக்கேற்றினர். அவ்விளக்கொளியில் நிற்கவும் இடமின்றித் தத்தளிக்கும் தம்மில் ஒருவராய் உடனிருக்க வந்தவர் வேறு யாருமல்லர்; திருப்பொலியும் பொன்மேனியனான திருமாலே எனக் கண்டு கொண்டார் பேயாழ்வார். அவருக்கு அப்போது ஏற்பட்ட ஆனந்தத்திற்கோர் அளவில்லை. எந்த எம்பெருமானைக் 'காண வேண்டும். கண்டு அவன் திருவடியே சேர வேண்டும்' என்ற பக்தி வைராக்கியம் பூண்டவராய் திருத்தலம் தோறும் சென்று அவன் திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபட்டவராய் திருக்கோவலூரை அடைந்தாரோ, அந்த ஆழிவண்ணனின் அருளொழுகும் வடிவத்தைக் கண்டதன்றி அவனது திருமேனி தீண்டும் பெரும்பேறும் வாய்க்கப் பெற்றுவிட்டாரல்லவா! தாம் பெற்ற பேற்றினை இத்தரணி வாழ் எவரும் எளிதில் பெறலாகும் என்பதனை உணர்த்துமுகமாக தம வாய்விட்டு தண்ணார் தீந்தமிழால் பாடவும் தொடங்கி விட்டார். அவ்வாறு அவர் அப்போது அந்தாதியாகப் பாடிய நூறு திருப்பாடல்களே 'மூன்றாந்திருவந்தாதி' என்று பெரிதும் போற்றி உரைக்கப்படும் சிறப்பை அடைந்திருக்கின்றன. அவற்றில் முதலாவதாக வெளிப் போந்த பாடலையே நாம் ஆரம்பத்தில் கண்டோம்.

'இறைவன் யார்? அவனை அடையும் வழி என்ன?' என்பவற்றுக்கான விளக்கங்கள் தருபவையே பல மதங்களாகும். அவை அடை விரும்பும் இலக்கு இறைவனாக இருந்தாலும் அதற்கான வழி காட்டுவதில் அவை வேறுபடுகின்றன. வெறும் தர்க்கத்தின் அடிப்படையில் இறை நம்பிக்கையை வளர்ப்பதைவிட அவனையே நேரில் காணவும், காட்டவும் கூடுமானால் பக்தி நெறி பெரிதும் வளரும். பேயாழ்வார் அத்திருப்பணியையே தம்முடைய முதற் பாடலின் மூலம் செய்துள்ளார். 'திருமாலைக் கண்டேன்' என்று அவர் களிநடம் புரிகின்றபோது மற்றைய வைணவர்களும் தம் நெறிவழிச் சென்றால்- பேயாழ்வாரைப் போன்ற பெரும் பக்தராய் விளங்கினால் - பேராழி வண்ணனைக் காணலாகும் என்ற நம்பிக்கைக்கு ஆளாவரன்றோ! அதனாலேயே பேயாழ்வாரின் முதற் பாடல் வைணவர்களுக்கு நம்பிக்கை ஒளியூட்டுகிறதென்று கட்டுரையின் துவக்கத்தில் சொல்லப்பட்டது.

பேயாழ்வார் திருக்கோவலூரில் திருமாலைக் கண்டதும், வைணவ நெறி பரப்பும் திருத்தொண்டே புரிந்து வாழ்ந்ததும், பொய்கையாழ்வாரோடும், பூதத்தாழ்வாரோடும் சேர்ந்து திவ்ய தேச யாத்திரை செய்ததும், திருமழிசைக்குச் சென்று திருமழிசையாழ்வாரோடும் உடனுறைந்ததும், இறுதியில் திருக்கோவலூ

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. திருப்பாவை (அச்சில்) | |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்க்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்களை அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

ருக்கே திரும்பி வந்து திருநாட்டுக்கு எழுந்தருளியதும் ஏதோ தற்செயலாக நடந்தேறிய காரியங்களல்ல. தாம் இவ்வையகத்தில் தோன்றிய காலந்தொட்டு அவர் வைணவ நெறியில் கொண்டிருந்த வைராக்கிய உணர்வும், 'உய்வடைவதற்கு உலகளந்தவனே ஒரேவழி' என்ற அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கையுமே அவரை முதலாழ்வார்களில் ஒருவராக வைத்துப் பெரிதும் போற்றப்படும் பெருநிலைக்கு உயர்த்தின. அவருடைய பக்தி நம்மைப் போன்ற சாதாரண மக்களுடையதைப் போன்றதல்ல. அவருடைய கை ஊணுக்கும், உடைக்கும், உறையுளுக்கும் கூப்பிய வெறுங்கையல்ல. பொன்னுக்கும், பொருளுக்கும், போகத்திற்கும் ஏங்கித் தொழுத பேராசைக் கையுமல்ல. 'என்னைப் படைத்தவன் எம்பெருமான். அவனே என்னை ஈடேற்றவும் வல்லவன்' என்ற ஞானத்தோடு அவனோடு இரண்டறக் கலந்துவிடும் ஆவலோடு கூப்பிய திருக்கை. அதனால்தான் அக்கைக்குரியவரின் பக்தி நிலையானது'பரமபக்தி' என்று பாகவதர்களால் புகழப்படுகிறது. பரமபக்தியின் வயப்பட்டவராய் வேறெந்த நினைவிற்கும் இடமளிக்காதவராய் பேய் போல் திரிந்தவரானதாலேயே 'பேயாழ்வார்' என்று அழைக்கப்படுகின்றார். சிறப்புப் பெயரையன்றி அவருடைய இயற்பெயர் இன்னதென்று நமக்குத் தெரியவில்லை.

பேயாழ்வார் திருமாலின் திருக்கரத்தில் இலங்கும் நந்தகம் என்னும் வாளின் அம்சராகக் கருதப்படுகின்றார். அவர் த்வாபர யுகத்தில் 862900 வருடங்களுக்குப் பின் ஸித்தார்த்தி என்னும் வருடத்தில் ஐப்பசி மாதத்தில்பூதத்தாழ்வார் அவதரித்த மறுதினம் சதய நட்சத்திரத்தில் மயிலாப்பூரிலுள்ள ஒரு கிணற்றிலிருந்த செவ்வல்லிப்பூவின் நடுவிலிருந்து தோன்றியருளியதாகக் கூறுவர். எனவே அவருடைய அவதாரமானது

ஒரு மானுடப் பெண்ணின் வயிற்றில் பத்து மாதம் அடைப்பட்டிருந்தபின் தோன்றிய நல்ல, வைணவ நெறியைத் தழைத்தோங்கச் செய்வதற்காக எம் பெருமான் நினைத்த மாத்திரத்தில் பக்தி மணம் பரப்ப வந்த பேயாழ் வார் பூமணத்திற்கிடையே தோன்றி யருளினார்.

இனி, பேயாழ்வார் அருளிச் செய் துள்ள மூன்றாம் திருவந்தாதியின் நலத்தினைச் சிறிது சுவைப்போம்.

பேயாழ்வார் கண்கண்ட தெய்வ மாய் வழிபட்ட ஒரே தெய்வம் திரு மாலேயாவன், அவனை வணங்கி யல்லாது உலக உயிர்களுக்கும், ஏனைய பொருட்களுக்கும் உய்யும் நெறி கிடையாது. ஆழிவலவனை நமக்கு அரணாகக்கொண்டாலன்றிப் பிறப்பேதும் இல்லையாகாது. பிற வாதிருத்தல் என்பது முக்தி நிலையே யாகும். வைகுண்ட வாழ்வென் பதும், திருமாலோடு ஐக்கியமாதல் என்பதும் அதுவே. உலகில் பிறப் பெடுத்தவர் படுகின்ற துயரம் சொல்லி முடியாது. தாயின் வயிற்றை அடைந்தது முதல் தரணியில் வெளிப் போங்காலம் வரையும் படுகின்ற துயரமும், குழந்தையாய் தாய்த் தந்தையர் உதவியை நாடியிருந்து நோய் நொடிகளுக்கு ஏற்ற பாத்திர மாய் திகழ்ந்து படுகின்ற துயரமும், பின் பாலகனாய் கல்விச்சாலை சென்று அறிவு பெறுவதாகச் சொல்லி பலப்பல கற்றுத் தேறும் துயரமும், வாலிப வயதில் அவ்வயதிற்றோன் றும் பருவக் கவர்ச்சிக் காட்பட்டு பலர் பின்சென்று, மனம் சிதைவுற்று படுகின்ற துயரமும், மணம் புரிந்து, குழந்தைகள் பெற்று அவர்களை வளர்க்க நாளும் உழைத்துப்படுகின்ற துயரமும் இறுதியில் நாடி தளர்ந்து, 'இதுகாறும் வாழ்ந்த வாழ்க்கை பொய், இனிக்கப் பேசிக் குலவிய உறவும் பொய்' என்ற உணர்வு வயப் பட்டு போங்காலத்தை எதிர்நோக்கி இருக்கும் துயரமும்... அப்பப்பா...

தெரிந்து கொள்ளுங்கள் :

## ஷோடஸ உபசாரங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆவாஹனம் | 2. | ஆசனம் | 3. | அர்க்கியம் |
| 4. | பாத்யம் | 5. | ஆசமனீயம் | 6. | மதுபர்க்கம் |
| 7. | ஸ்நானம் | 8. | வஸ்திரம் | 9. | யஞ்ஞோபவீதம் |
| 10. | சந்தனம் | 11. | புஷ்பம் | 12. | தூபம் |
| 13. | தீபம் | 14. | அமுதுபடி | 15. | தாம்பூலம் |
| 16. | ப்ரதக்ஷிணம் | 17. | நமஸ்காரம் | 18. | உத்வாஸநம் |

## சாஷ்டாங்க நமஸ்காரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கைகள் | 2. | கால்கள் | 3. | முழங்கால்கள் |
| 4. | மார்ப்பு | 5. | சிரஸ் | 6. | நேத்திரம் |
| 7. | வாய் | 8. | மனது — இவைகள் புருஷர்களுக்கு மட்டும். | | |

பெண்களுக்கு பஞ்ச அங்க நமஸ்காரம் ;

கை, கால், முழங்கால், முகம், மனது இவையே பெண்களுக்கு பஞ்சஅங்க நமஸ்காரம்.

## இந்திரனின் சாபம்

ஓர் சமயம் இந்திரன் ஓர் அந்தணனைக் கொன்ற பாபத்தால் மிகவும் வருத்தமுற்றான். பிறகு அவன் அந்தப் பாபங்களைச் சில புண் ணியங்களையும் சேர்த்துச் சிலருக்குப் பகிர்ந்து அளித்து ஒழித்தான். அதன் விவரம் வருமாறு :-

| | | புண்ணியம் | பாபம் |
|---|---|---|---|
| 1. | பூமிக்கு | தோண்டிய பள்ளம் தானாகவே மூடுவது | பாலைவனம் |
| 2. | தண்ணீருக்கு | ஊற்று சுரப்பது | நுரை |
| 3. | மரங்களுக்கு | வெட்டியமரம் துளிர்ப்பது | பால்மரம் பிசின் |
| 4. | பெண்களுக்கு | கருவுறும் சிற்றின்பம் | மாதவிடாய் |

## கண்விழிக்கும் போது

ஒவ்வொருவரும் இரவு உறங்கி அதிகாலை எழுந்திருக்கும்போது தங்கள் கைகளைப் பார்த்தால் அதனால் என்ன பலன் என்பதைக் கீழே அறிந்துகொள்வோம்.

கையினுடைய நுனி விரலில் லக்ஷ்மி வசிக்கிறாள். கையின் மத்தி யில் சரஸ்வதி, கையின் அடிப்பாகத்தில் கோவிந்தனும் வாசம் செய்வ தாகப் பெரியோர் சொல்லி இருக்கின்றனர்.

— அடியார்க்கடியவன், கேதாண்டபட்டி.

இவ்வுலக வாழ்வின் துயரக்கதை சொல்லால் வர்ணிக்கலாகும் தரத்த தன்று. எனவே இப்பிறவிப் பிணி தீர்க்கும் அருமருந்தினை பேயாழ் வார் சுட்டிக் காட்டும்போது அதனைக்கொண்டு உய்வடைவது நம் அறிவுடைமையாகும்.

"ஓர்த்த மனத்தராய் ஐந்தடக்கி
ஆராய்ந்து
பேர்த்தால் பிறப்பேழும் பேர்க்கலாம்"

(மூன்றாந் திருவந்தாதி 79-ம் பாடல்)

என்கிறார் ஆழ்வார். 'ஒரு முகப்பட்ட மனமுடையவராய் ஐம்புலனையும் அடக்கி எம்பெருமானை வணங்கி னால் பிறவியை ஒழிக்கலாம்' என் பது கருத்து.

"ஐயா, மன ஒருமைப்பாடும், ஐம் புலன் ஒடுக்கமும் அவ்வளவு எளிதில் கைவரப் பெறுவன அல்லவே; அவை இரண்டும் வாய்க்கப் பெற வேண்டு மானால் மலைப் பக்கம் நாடி கடுந் தவம் புரிந்தும், குளிர் நாளில் நீரில் மூழ்கியும், கோடை வெயிலில் நெருப் பிடையே நின்றும் இவ்வுடல் உணர்வை அறவே அறுத்தல் அவ சியம் ஆகுமே. எம்மால் இவை யாற் றல் ஆகுமானாலன்றோ எம்பெரு மானை சரியான முறையில் வழி பாடி யற்றியவர்களாவோம்" என்று சிலர் கேட்கலாம். அதற்கு ஆழ்வார் மறு மொழியாக "நீங்கள் கடுந்தவம் செய்தால்தான் வெஃகா என்ற திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானை அடைய முடியும் என்பதில்லை. எங்கும் எளிதில் கிடைக்கும் பூக்களைத் தூவி கையால் தொழுதாலே போதும். உங்கள் தீவினைகளெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய் விடும்" என்று கூறுகிறார். தீவினைகள் ஒழிந்தால் பிறவித் துன்பமும் இல்லையாகி விடு மன்றோ? பாடல் வருமாறு:

"பொருப்பிடையே நின்றும் புனல்
குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர்வேண்டா
விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்
மலர் தூய்க் கைதொழுதால்
அஃகாவே தீவினைக ளாய்ந்து"

(மூன்றாந் திருவந்தாதி 76ம் பாடல்)

திருமாலை வழிபடுவதற்கு எளிய வழியைக் கூறிய ஆழ்வார், 'வழி எளிமை கருதி மூர்த்தி பெருமையை மறக்கலாகாது' என்பதற்காக அவனு டைய எல்லாமாய் வியாபித்திருக்கும் தன்மையை ஒரு பாடலில் விவரித் துள்ளார். 'அவனுக்குஇணை அவனே. அவன் உருவே எல்லா உருவங்களும். அவனே தவ வுருவாயும், நட்சத்திர மாயும், நெருப்பாயும், மலையாயும், எட்டு திசைகளாயும், சூரியன், சந் திரன் என்ற சுடர்களாயும் உள்ள இறைவன்'

இக்கருத்தடங்கிய பாடல் வரு மாறு;

"தானே தனக்குஉவமை தன்னுருவே
எவ்வுருவும்
தானே தவவுருவும் தாரகையும்
தானே
எரிசுடரும் மால்வரையும் எண்திசை
யும் அண்டத்து
இருசுடரு மாய இறை"

(மூன்றாந் திருவந்தாதி 38-ம் பாடல்)

எல்லாமாயுள்ள எம்பெருமானே 'வருநரகம் தீர்க்கும் மருந்து' என் பதனை மூன்றாம் பாடலின் ஈற்றடி யிலேயே குறித்துள்ளார் ஆழ்வார். இப்பிறவிக்கப்பால் வினைப் பயனுக்கு ஈடாக வர உள்ள நரகத்தினை நீக்கி நல்லுலகம் சேர்ப்பவன் மட்டுமல்லன் அவன். இப்பிறவியிலேயே நம்மை அண்டும் துன்பமும், துயரமும் நீரணை மேல் பள்ளி அடைந்தானை நாம் நாளும் சென்றடைந்து தொழு தால் தொலைத் தொழியும். இதனை மூன்றாந் திருவந்தாதியின் 27-ம் பாடல் நமக்கு அறிவுறுத்துகின்றது.

திருமாலுக்கு,

"கண்ணும் கமலம் கமலமே கைத்
தலமும்
மண்ணளந்த பாதமும் மற்றவையே"

(மூன்றாந் திருவந்தாதி 9 ஆம் பாட லடிகள்) ஆகும்.

உருவாலும் உள்ளத்தாலும் பூவி னும் மென்மைத் தன்மையுடை யவனானதால் அடியார்படுதுயராயின வற்றைத் தீர்க்க ஓடோடியும் வரு வான். அவன் அடியார்க்கு எளியனா னாலும் யாரும் அறிவறியாத் தன்மை யனுமாவான். மூன்றடியால் உலக ளந்த நீண்ட திருமால் அவன். ஆனால், அவனே மூன்று உலகங்களை யும் உண்டு ஆலிலை மேல் கண் வளரும் சிறு பிள்ளையாயும் முன் பிருந்தான். அவனை உள்ளபடி தெளிந்து தேர்வதென்பது யாருக்கும் இயலாது. நாமங்கையாகிய சரஸ்வதி யாலேயே பூமங்கை கேள்வனின் பொலிவைச் சரிவர சொல்ல முடி யாது என்கிறது மூன்றாந் திருவந் தாதியின் 56வது பாடல். எனவே அவனைப் பற்றிய அதிகப்படியான ஆராய்ச்சிகள் நமக்குத் தேவை யில்லை. அவன் அருளுக்குப் பாத் திரர்களாய் நாம் ஆனால் அதுவே போதும். நாம் அறிய வேண்டிய வற்றை அறிய வேண்டிய நேரத்தில் அறிவித்து உய்விப்பான் அந்நிமலன். வியப்புச் சுவையும், பக்திச் சுவையும் ததும்பும் ஆழ்வாரின் பாடலைக் கீழே காணலாம்:

"நினைத்து உலகில் ஆர்தெளிவார்?
நீண்ட திருமால்
அனைத்துலகு முள்ளொடுக்கி ஆல்
மேல்—கனைத்துலவு
வெள்ளத்தோர் பிள்ளையாய்
மெள்ளத் துயின்றானை
உள்ளத்தே வைநெஞ்சே! உய்த்து"

(மூன்றாந் திருவந்தாதி 93ம் பாடல்)

பேயாழ்வார் திருமாலின் அவதார மகிமைகளில் மனமிழந்து அகங்குழைய பல இடங்களில் பாடியுள்ளார்.

(39-ம் பக்கம் பார்க்க)

# ★ நானிலம் புகழும் நாமதேவர் ★

பகவான் படைத்த படைப்புக்களில் மிகவும் புனிதமானது மனித படைப்பு. இது கிடைப்பதற்கு அரியது. எனவேதான் "அரிது அரிது மானிடராய்ப் பிறப்பதரிது" என்று ஆன்றோர் கூறியுள்ளார்கள். மனிதன் தேவனாகலாம். இது மானிடர்க்கேயுள்ள தனிப் பிறப்புரிமை. இதை வள்ளுவர்,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
வானுறையும் தெய்வத்துள் வைக்கப்
படும்"

என்றார்.

இந்த வாழ வேண்டிய வழிமுறைகளை தர்மம் பல இடங்களில் பல வழிகளில் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அப்படி எடுத்துக்காட்டியும் நாம் அவற்றைக் கடைப்பிடிக்க மறந்து மாற்று வழிகளில் செல்ல நேர்ந்தபோதுதர்மம் தடுமாறித்தலை கீழாக வீழ்ந்தது. அதர்மம் ஆணவத்தோடு ஏறுநடை போட்டது. விளக்கில் வீழ்ந்து மாயும் விட்டில் பூச்சியானோம். இதைக் கவி பாரதி

"வேண்டுமென விளக்கில் வீழுஞ்
சிறு பூச்சிதனை
யாவர் விலக்க வல்லார்"

என்று கேட்பான். அது பகவான் ஒருவனால்தான் முடியும். பின் மடியும் பூச்சியும் உய்வுறும். எனவே தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு பகவான் பல அவதாரங்களை எடுக்க நேர்ந்தது. அவன் கருணையில் கடலுக்கும மேலானவன். தம் மக்கள் தம்மிடம் வந்து சேரும் பொருட்டு அவன் என்றும் வழிமேல் விழி வைத்துக் காத்துக் கொண்டிருக்கிறான். காத்திருந்து காலம் கடந்ததுதான் மீதம். சீர்ப்பட்டு மக்கள் தன்னை நோக்கி வர ஆர்வம் கொண்டான். அழுது அடம் பிடிக்கும் குழந்தையை சந்தோஷப்படுத்தப் பெற்றவர்கள் உற்றவர்கள் பலஉத்திகளை கையாளுவதுபோல் பகவான்சில வேடங்களைப் போட்டான். அவற்றில் முக்கியமானது இராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் ஆகும்.

இராமாவதாரத்தில் அவன் தன்னை ஓர் சாதாரண மனிதனாக ஆனால் தர்மவானாகக் காட்டிக் கொண்டான். மக்கள் அதை மறுத்து நீ ஆண்டவனின் அம்சம் என்றார்கள். அதனால் அவனைப்போல் மக்களால் வாழ முடியாத நிலை ஏற்பட்டது. மாறாக, கிருஷ்ணாவதாரத்தில் அவன் தான் பகவான் என்று பல இடங்களில் பல வழிகளில் பற்பல லீலைகள் மூலம் காட்டி உலகோரை உய்விக்க எண்ணினான். ஆனால்நடந்தது என்ன ஒருவரும் அவனை பகவான் என்று நம்பவில்லை. மாறாக, அவனைப் பொய்யும் புரட்டும் கபடமும் உள்ள சாதாரண மனிதனாக மாடு மேய்க்கும் மானிடனாக நினைத்தார்கள். பாரதியும் அவனை,

"அருள் வண்மையால் அவன்
மாத்திரம்
பொய்கள் மலை மலையாவுரைப்
பான்"

என்று பாடியுள்ளான். ஆகவே ஒருவரும் அவனைப் பின்பற்ற தயாராய் இல்லை. அவன் வாதத்தைக் கேட்கவும் முன்வரவில்லை. அதனால் ஏற்பட்டது பாரதப்போர் என்னும் பெரும் அழிவு. எனவே பகவான் போட்ட இருபெரும் வேடங்கள் பயனற்றுவிட்டன. பகவான் அளப்பதற்கரிய அபரிதமான தயாள குணம் படைத்தவன். அவன் இத்தோடு இதை விட்டுவிடவில்லை. எப்படியும் மனித குலத்தை உயர்த்திட திருவுள்ளம் கொண்டான். மாப்பொருள் மனிதனாக நடந்து தோற்றுவிடவே, மனிதர்களை மாப்பொருளாக மகான்களாக மாற்ற எண்ணம்கொண்டான். மக்களைவிட மகான்களிடம், பக்தர்களிடத்தில் அவன் தோற்பதில் என்றும் சந்தோஷப்படுவான். இதன் விளைவே தென்னாட்டில் தோன்றிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் மற்றும் பல மகாத்மாக்கள். இவர்கள் மூலம் மாக்களை மக்களாக்க எண்ணம் கொண்டான். அதில் வெற்றியும் கொண்டான். இதைப்போன்று ஒவ்வொரு மாநிலத்திலும் எத்தனை எத்தனையோ இனியோர்களைப் படைத்து நானிலத்தில் நடக்கவிட்டான். அப்படி பெருமைபெற்ற இடங்களில் மராத்திய மாநிலத்திற்கு ஒரு தனியிடம் உண்டு.

**திரு. எஸ். நம்பி - பம்பாய்.**

மகாராஷ்ட்ரத்தில் உள்ள பண்டரி புரத்தில் (பண்டர்பூர்) பகவான் நாராயணன் பல லீலைகளை நடத்திக் காட்டினான். அதன் மூலம் அனேக பக்தர்களைப் படைத்துப் பாரில் பாட, ஆடவைத்தான். அவர்களோடு கலந்தான், நடந்தான், விளையாடினான். அவர்களின் இன்ப துன்பங்களில் இனிதே இணைந்தான்; அன்புப் பிடியில் பிணைந்தான். முடிவில் அம் மகாத்மாக்களை வாழ்வாங்கு வாழச் செய்து தன் காலடியில் வீழச்செய்தான்; பின் வானோக்கி எழச் செய்தான். இதன் மூலம் இலட்சோப இலட்சமக்களைத் தன்பால் ஈர்த்தான். இந்த பெரியோர்களைப்பற்றி தமிழ் நாட்டில் அதிகம் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. எனவே அத்தகையவர்களில் சிலரின் வாழ்க்கை வரலாற்றை அறிவதின்

மூலம் பண்டரிநாதனின் கிருபை கிடைக்க வாய்ப்புண்டு.

பக்தனாக இருக்க வேண்டிய தகுதிகள் யாவை? உயர்ந்த யோகியாய் இருக்க வேண்டுமா? இல்லை. பின் ஆணாக இருக்கவேண்டுமா? இல்லை. பின் முதிர்ந்த வயதாக வேண்டுமா? இல்லையே. அறிவாளியாக இருக்க வேண்டுமா? இல்லை. அல்லது பிராமணனாக இருக்க வேண்டுமா? இல்லை அல்லது வீரனாக இருக்க வேண்டுமா? அதுவும் இல்லை. அழகானவர்களாக அமையவேண்டுமா? இதுவும் இல்லை. ஒருவேளை பணக்காரனாக இருக்க வேண்டுமா? இல்லவே இல்லை. பின் பக்தனாக இருக்க என்னதான் தகுதி வேண்டும்? மேலே உள்ள கேள்விகட்கு சிருங்கேரி ஆச்சாரியர் மகா சன்னிதானம் கீழ்கண்ட பதில்களைத் தருகிறார்.

பாரதத்தில்வரும் கசாப்புக்கடைக்காரன், தர்ம வியாதன், ஓர் யோகி இல்லை. கொங்கண முனிவனுக்கு இவனை அறிமுகம் செய்தவள் ஓர் உத்தம பெண்மணிதான். அடுத்து துருவன் ஓர் ஐந்து வயது பாலகன்; வயது முதிர்ந்திருக்கவில்லை. விதுரன் ஒருவேலைக்காரிக்குப்பிறந்தவன் தான்; அவன் பிராமணன் அல்ல. கிருஷ்ணனின் தாத்தா உக்கிரசேனன் பெரும் வீரன் அல்ல; ஓர் சராசரி மனிதன்தான். கிருஷ்ணன் மதுராவுக்கு செல்லும் வழியில் எதிர்ப்பட்ட பெண்மணி "குப்ஷா" ஓர் கூனி; அழகில்லாதவள். கிருஷ்ணனின் உற்ற நண்பர் குசேலர் ஓர் ஏழை; பணக்காரன் அல்லவே. கடைசியில் கஜேந்திரன் மனித ஜென்மமே இல்லை. அது ஒரு விலங்கு. மீண்டும் அதே கேள்வி! பின் பக்தனாக இருக்க என்னதான் தகுதி வேண்டும். ஆம் இதற்கு எந்த தகுதியும் கிடையாது ஒன்றே ஒன்றைத்தவிர! அது என்னது? அது பக்தனாக இருப்பது ஒன்றுதான். என்னே அற்புத விளக்கம்?

வைஷ்ணவ சம்பிரதாயத்தில் சரணா கதி தத்துவத்திற்கு மிக்க ஏற்றம் கொடுக்கப்பட்டுள்ளது. எவ்வித வியா கூலமின்றி பரமன் பார்த்துக்கொள் வான் என்று அவன் காலடியில் விழ வேண்டியது. அதாவது பூனைக் குட்டியைப்போல் (இதை ஓர் நியாய மாக சாஸ்த்திரம் கூறும்) இருக்க வேண்டும். தாய்ப்பூனை அதன் கழுத் தைக் கவ்விப்பிடித்துப் பல இடங் களுக்கு எடுத்துச் சென்று மறைத்து வாழவைக்கும். அதே கடி எலியை இரண்டு துண்டாக வெட்டிவிடும். பகைவர்களை அழிக்கும் சுதர்சனம் பக்தர்களை காப்பதுபோல் எனலாம். அடுத்து தாய்ப்பூனையின் வாயில் தொங்கும் குட்டிப்பூனை கண்ணை மூடித்தூங்குவதுபோல் ஆனந்தத்தில் இருக்கும். ஏனென்றால் அது கவலை யற்று தாய்ப்பூனையின் இறுக்கமான, நெருக்கமான அன்புப்பிடிப்பில் சிக்குண்டு அகமகிழ்ந்து ஊஞ்சலாட் டம் ஆடுகிறது. கையிலிருந்து விழும் தண்டம் (கம்பு) எப்படி எவ்வித யோசனையுமின்றித் தடால் என்று விழுமோ அதேபோல் பரமனின் காலடியில் சிந்தையின்றி விழுந்திடல் வேண்டும். இது தண்டம் சமர்ப்பித் தல் என்ற தத்துவ விளக்கமாகும். கையில் தண்டம் கொண்ட சன்னியா சிகள் இப்படி பரமனின் காலடியில் வீழ்ந்தவர்கள் என்பதை விளக்கவே அதை கையில் பிடித்திருக்கிறார்கள். இதைத்தவிர வேறு விளக்கங்களும் உண்டு. எல்லாம் அவன் என்றும், எதிலும் அவன் என்றும் தெரிந்த பின்பு துக்கத்திற்கு இடமேது. இதை நம் பாரதி "ஏழு புவியுளந் தெய்வம் தெய்வம், எங்கும் தெய்வம் எதுவும் தெய்வம்" என்பான்.

இப்படிப் பகவானை அறிந்து, தெரிந்து, ஏற்றத்தாழ்வின்றி விருப்பு வெறுப்பின்றி, குலமின்றி குடியின்றி வாழ்ந்துகாட்டிய மகராஷ்ட்ர மகாத் மாக்களின் வரிசையில முதலில் நிற் பவா, நம் ஞானசம்பந்தருக்கு நிக ரான, பக்தசிரோன்மணி ஞானேஸ் வரர் ஆவார். அவரைப்பற்றிய வாழ்க்கை குறிப்பு ஏற்கனவே நம் ஸப்தகிரியில் வெளிவந்துள்ளது. எனவே அவரையடுத்து பக்தர் நாம தேவரின் வாழ்க்கையை நோக்கு வோமாக!

இன்று பண்டரிபுரத்தில் உள்ள கோயிலை கர்நாடகத்திலிருந்து வந்த பக்தர் "புண்டலிகர்" என்பவர் கட் டியதாக நம்பப்படுகிறது. அவரைப் பற்றி அதிக விவரம் தெரியவில்லை. இன்றும் அன்னாரின் கோயிலை வணங்கிய பின்பே பண்டரி நாதனை வணங்குகிறார்கள். இதி லிருந்து பகவான் பக்தனுக்கு எவ் வளவு ஏற்றத்தைக் கொடுத்துள் ளான் என்பது தெள்ளெனத்தெளிவா கிறது. பண்டரிநாதனை நாடிவரும் பக்தர்கள் தங்களை "வர்காரி" (பக்தர்கள்) என்று அழைக்கிறார்கள்: இதற்கு வர்காரி சம்ப்ரதாயம் என்று பெயர் உண்டு.

நாமதேவர் ஞானேஸ்வரர்க்கு 5 வருடங்களுக்குப் முன் சுக்ல ஏகாதசி கார்த்திகை மாதம் 1270ம் வருடம் நரசிங்கப்பூரில் பிறந்தார். தாய் கொன்னைபாய். தந்தை தமஷெட்டி, ஓர் தையல் தொழிலாளி. நாமதேவ ரின் தநதை தினம் பண்டரிநாத னுக்குப்பாலை நிவேதனமாக அளித்து வந்தார். நாமதேவர் 5 வயது பால னாக இருந்தபோது ஒரு நாள் அவர் தாயார் 'இன்று தந்தை வர நேர மாகும், நீ பாலைக் கொண்டுபோய் பண்டரிநாதனுக்கு நிவேதனம்பண்ணி விட்டு வா' என்று பணித்தாள்.

பக்குவமில்லாத பாலகன் மிகவும் ஜாக்கிரதையாகப் பாலை எடுத்துச் சென்று பகவான் முன்னால் வைத்து "பாலைக்குடி" என்று அன்புடன் கூறி நின்றான். ஒன்றும் நிகழாமல் பால் அப்படியே இருக்கிறது. பக் தர்கள் நிவேதனத்தை பகவான் முன் வைத்து மனதால் அர்ப்பணித்து விட்டு அதை அவர்கள் பிரசாதமாக பகிர்ந்துகொள்வார்கள் என்ற தத்து வம் ஐந்துவயது பாலகனுக்கு எப்படித் தெரியும். அழுது அடம்பிடித்துப் பார்த்தான். பலன் ஒன்றுமில்லை. பின் கருங்கல்லில் முட்டித்தலையை உடைத்துக்கொள்வேன் என்று கூவி அழுதான். கருணாகரின் இதயம் கனிந்து கரைந்துவிட்டது. உடன், பால் மாயமாய் மறைந்துவிட்டது. அதோடல்லாமல் பண்டரிநாதன் சிரித்த முகத்துடன் நின்று கண்ணுக் கினிய காட்சியும் கொடுத்தான். என்னே நாமதேவரின் பாக்கியம்!

நாமதேவர் வெறும் பாத்திரத்துடன் திரும்பி வந்ததும் தாய் திகைத்தாள். 'பாலை நீ குடித்தாயா' என்று தனய னிடம் கேட்டாள். 'இல்லை பண்டரி நாதன் குடித்தான்' எனக் கூறி நின் றான். விந்தை நடந்ததையறியாத தாய் சிந்தையில் கோபம் கொண்டு தனயன் பொய்ச் சொல்வதாக நினைத்து அவனைக் கண்டித்தாள். சத்தம்கேட்டு தந்தைவந்துசேர்ந்தார். மறுநாள் காலையிலும் மகனை பாலை எடுத்துச் செல்லுமாறு கூறிவிட்டுத் தான் பின்னால் மறைந்து நின்று பார்த்தார். என்ன அதிசயம், பால கனின் அன்புக்கட்டளைக்குக் கட்டுப் பட்டு பண்டரிநாதன் பாலைப் பருகு வதைப் பார்த்தார், பரவசப்பட்டார். அவன் அன்று யசோதையின் அன் புக்குக் கட்டுப்பட்டுத் தாம்புக்கயிற் றில் உரலில் கட்டுண்டவன் ஆயிற்றே! பக்தனுக்குக் கட்டுப்படுவதில் அவ னுக்குத்தான் என்ன ஆனந்தம். பின் பண்டரிநாதன் தந்தையையும் தன யனையும் ஆசீர்வதித்து இங்கு நடந்த இச்செயதியை யாரிடமும் கூற வேண்டாம் என்று சொல்லி மறைந் தார். ஏன் அன்று இருட்டறையில் ஒளிவிளக்காய் சங்கு சக்ரதாரியாய் தோன்றி வசுதேவருக்கும் தேவகிக் கும் காட்சிக் கொடுத்துப் பின் கண் மறைக்கவில்லையா?

இதற்கிடையில் மகனை தையல் தொழிலைக கற்றுக்கொள்ள எவ் வளவோ கூறியும், வற்புறுத்தியும்

அவா மனம் அதில் நாடவில்லை. 'கோல் நோக்கியோடும் கொடிபோல் மால் நோக்கி ஓடுதே மனம்' என்ற ஆழ்வார் வாக்குப்படி நாமதேவர் எப்போதும் பகவான் நாமத்தைக் கூறிப் பாடியும் ஆடியும் பக்தர்கள் கூட்டத்திடையே கோயில் வாசம் செய்து வந்தார். கோபம் மேலிட்ட தாய் மகனை கைப்பிடித்து வீட்டுக்கு இழுத்து வருவாள். பாதி வழியில் திரும்பிப் பார்த்தால் கண்களுக்கு பகவான் பாண்டுரங்கன் தென்படுவான். திகைத்து திரும்பவும் கோயிலுக்கு ஓடுவாள். இப்படிப் பல முறை ஓடி தாய் களைத்து நின்றாள். கடைசியில் எது பாண்டுரங்கன் எது தன் மகன் என்று தெரியாமல் குழம்பித் திகைத்து நின்றாள். கிருஷ்ணாவதாரத்தில் கோபிகைகளோடு இதே விளையாட்டை விளையாடி வினை தீர்த்தவனாயிற்றே?

நாமதேவருக்கு இளம் வயதிலேயே "நாஜைபாய்" என்னும் மங்கையை மணம் செய்வித்தார்கள். பதியின் நிலையைக்கண்டு சற்றே தடுமாறிய மனைவி பின் தன்னையும் பண்டரிநாதனின் காலடியில் இணைத்துக் கொண்டாள். நாமதேவர் அற்புதமான பக்தி பாடல்களை ஆயிரக் கணக்கில் பாடி (அபங்) முழு நேர பக்தனாக மாறிவிட்டார். பண்டரிநாதனை சேவிக்க வருபவர்கள் முதலில் இவரை சேவித்து பின் அவனை வணங்கினார்கள்.

இந்நேரத்தில் ஞானேஸ்வரர் தன் சகோதர சகோதரியுடன் இத்தலத்திற்கு விஜயம் செய்தார். மகனை வணங்காமல் இறைவனைத் தரிசித்தனர். எல்லோரையும்போல் இவர்கள் தன்னை வணங்கிச் செல்லவில்லை என நாமதேவர் ஆத்திரப்பட்டார். இதையறிந்த ஞானேஸ்வரரின் தங்கை முக்தாபாய் "கடவுள் பக்கத்தில் வாழ்ந்தும் நாமதேவர் எதுவும் அறியாத அஞ்ஞானி" என்று இடித்துரைத்தாள். அத்தோடு "இவரது அகங்காரம் ஆத்ம பாதைக்கு முட்டுக்கட்டை" என்று சாடினாள். அங்கேயே சாதுக்கள் முன்னிலையில் ஓர் பாடல் மூலம் (அபங்) சாதுக்களிடம் பணிவு இருக்க வேண்டும். இல்லையெனின் அவர்கள் பக்தராக மாட்டார்கள் என்றும் பாடிக்காட்டினாள். நான் என்னும் அகங்காரம் இருக்கும் வரை பரம நிலையடைய முடியாது. இதை "நான் எனும் ஈனப்பாழ்கெட என்றும் இருப்பேனே" என்கிறார் தாயுமானவர்.

பின் எல்லோர் முன்னிலையில் "கோராகும்பர்" என்ற மற்றோர் மகான் இவரை சோதித்து இவருக்கு பக்தியின் முதிர்ச்சி இருக்கிறதா என்று பார்ப்பதாக ஏற்பாடாயிற்று. கோராகும்பர் (இவர் ஓர் மண்பாண்ட தொழிலாளி. இவரைப்பற்றி பின்னால் பார்க்கப்போகிறோம்), பிசைந்த மண்ணை இம்மாதிரி நேரங்களில் முகத்தில் ஒட்டி அதன் பின் அது எந்த அளவுக்கு வெந்துள்ளது என்பதை வைத்து ஒருவர் பக்தியில் முதிர்ச்சியுள்ளவரா இல்லையா என்பதைச்சோதித்துக் கூறுவாராம். எந்த அளவுக்கு அவர் முதிர்ந்தவர் என்பது இதனால் அறியலாம். அங்குக் கூடியிருந்த பல பக்தர்களுக்கு, ஞானேஸ்வரர் கோஷ்டி உள்பட, இச்சோதனை பண்ணினார். அவர்கள் யாவரும் வெந்த பானைகளாகக் கண்டார் (முதிர்ந்தவர்கள்). ஆனால் நாமதேவரை அரை வேக்காடாக, முதிராதவராகக் கூறிவிட்டார்.

மனம் ஒடிந்த நாமதேவர் பண்டரிநாதனிடம் ஓடிக் கதறியழுதார். பக்தன் பேரில் பாசமுண்டு. அதே நேரத்தில் நான் என்னும் அகந்தையை அடக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டான் பகவான். நாமதேவரை "விசோபா கேசாரா" என்ற ஓர் வயது முதிர்ந்த குருவிடம் செல்லுமாறு ஆக்ஞாபித்தார். அவர் வேறு யாரும் அல்ல, இளம் ஞானேஸ்வரரின் முதிர்ந்த சீடர். நாமதேவர் குருவைத்தேடி "அம்வாத்யா" என்ற இடத்திற்குச் சென்றார். அங்கே ஒரு கோயிலுக்குள் விசோபா சிவலிங்கத்திற்குமேல் கால்களைத் தூக்கி வைத்துக்கொண்டு தரையில் படுத்திருந்தார். இந்த காட்சியைக் கண்ட நாமதேவர் திடுக்கிட்டு, 'குருதேவே லிங்கத்திலிருந்து காலை எடுங்கள்' என்று கத்தினார். விசோபா பொறுமையாக 'நீ சொல்வது சரிதான், ஆனால் எனக்கு வயதாகிவிட்டது. கால்களை நகர்த்த முடியவில்லை. நீ என் காலை எடுத்து கடவுள் எங்கு இல்லையோ அங்கு வை' என்றார். நாமதேவர் பல இடங்களில் கால்களைத் திருப்பி வைத்தார். வைத்த இடங்களில் எல்லாம் சிவலிங்கம் தோன்றியது! அவன்தான் தான் தோன்றியாயிற்றே குரு சிரித்தார்; நாமதேவர் திகைத்தார். அன்புடன் நாமையா என்று அழைத்தார். நாமதேவர்தான் குருவின் காலை பிடித்துவிட்டாரே! பின் கடவுள் எங்கும், எதிலும், பார்க்கும் பார்க்காத வஸ்துக்களிலும் இருக்கிறார் என்கிற "அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்துள்ள" பரிபூர்ணானந்தத்தை எண்ணி மகிழ்ந்தார். இதை பாரதி "உலகமே உடலாய் அதற்குள்ளே உயிரதாகி விளங்கிடும் தெய்வம்" என்று பாடுகின்றார். ஞானேஸ்வரரும் நாமதேவரும் உற்ற நண்பர்களாகிப் பல முறை சந்தித்து அகமகிழ்ந்து வந்தார்கள். கோராகும்பரும் இவரைப் போற்றி மகிழ்ந்தார்.

ஒரு நாள் நாமதேவர் சாப்பிடும் போது தட்டிலிருந்து ஒரு காய்ந்து உலர்ந்த ரொட்டித்துண்டை ஒரு நாய் கவ்விக்கொண்டு ஓடியது. உடனே, க்ஷணநேரம்கூட தாமதியாமல், நாமதேவர் ஒருபாத்திரத்தில் நெய்யை ஏந்திக்கொண்டு நாய் பின்னால் ஓடினார். "பகவானே! திரும்பி வா, இந்த நெய்யையும் எடுத்துக் கொள். காய்ந்துபோன ரொட்டித் துண்டு உனக்கு வயிற்று வலியைக்

(36-ஆம் பக்கம் பார்க்க)

# மகா பாரதத்தில் ஒரு வினாடி வினா?

க. உறவு சொல்ல வேண்டும் :

குந்திக்கு இவர்கள் என்ன உறவு

1. கர்ணன், 2. திருதராஷ்டிரன், 3. சுபத்திரை, 4. கடோத்கஜன், 5. கண்ணபிரான், 6. காந்தாரி.

ங. வரும் பாத்திரங்கள் பற்றி :

1. கண்ணபிரான் தவிர வேறு என்ன திருமால்-அவதாரங்கள் வருகின்றன?

2. அனுமன் வருகிறாரா, இல்லையா?

3. அகஸ்தியர் எங்கேயாவது கண்ணில் படுகிறாரா?

4. விசுவாமித்திரர் வருகிறாரா?

ச. யாருக்கு இந்தப் பெயர் உண்டு :

1. விருகோதரன், 2. ராதேயன் 3. பல்குனன், 4. பாஞ்சாலி, 5. தேவ விரதன்.

ஞ. பாரதப் போரில் இவர்கள் யார் பக்கம்?

1. பீஷ்மர், 2. துரோணர், 3. பூரிசிரவஸ், 4. ஜயத்ரதன்.

ட. மனைவி பெயர் என்ன?

1. அபிமன்யு, 2. துரோணர், 3. விராடன், 4. பீஷ்மர்.

ண. பாரதத்தில் 18 :

ஒன்று பர்வக் கணக்கு.

மற்றது நாள் கணக்கு.

மூன்றாவது அத்தியாய எண்ணிக்கை-இவ்வாறு மூன்று விதங்களில் 18 என்ற எண் இடம் பெற்றுள்ளது. என்னென்ன என்று விளக்கமாகச் சொல்லுங்கள், ஓரிரு வார்த்தைகளில்.

த. இடம் (எங்கே யார் கூறியது? என்று) சொன்னால் போதும் :

1. ஐவருமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்.

2. ஊசி முனை நிலமும் கிடையாது?

3. பயனைத் துறந்து செயல் புரிவாய்?

4. அசுவத்தாமா ஒழிந்தாயிற்று?

5. நகுலனை உயிர் மீட்டுத் தருவாயா?

ந. கொஞ்சம் சந்தேகம் உண்டா?

1. அக்ஞாதவாசத்தில் அர்ஜுனன் பெயர் பிரஹன்னளையா? சைரந்திரியா?

2. பாண்டவர் வனவாசம் பன்னிரண்டு ஆண்டா? பதின்மூன்றா?

3. சிகண்டி என்பது துருபதராஜன் மகனா? மகளா?

4. பகவத் கீதோபதேசம் நடைபெறுவது எந்தப் பர்வத்தில்?

ப. நம் காலத்துப் பாரதப் படைப்புகள் :

முக்கியமாக மூன்று கூறலாம்.

1. ஒன்று - காப்பிய வடிவில் அமைந்த நூல்

2. இரண்டு - நாடகமாக ஒரு பிரபலக் கதாசிரியர் அமைத்தது.

3. மூன்று-முழு இதிகாசத்தையும் சிறுசிறு கதைகள் போல அரசியல் மேதை எழுதியது, உரை நடையாக. இந்நூல்களின் பெயர்களை நீங்கள் சொல்ல வேண்டும்.

ம. ஊர் சொல்லுங்கள் :

1. பாரதப் போர் நடந்த இடம்.

2. ராஜசூய யாகம் நடைபெற்ற ஊர்.

3. சூதாட்டம் நடந்த நகரம்.

4. பகாசுரன் தினமும் ஓர் ஆளைப் புசித்து வந்த இடம்.

5. பாஞ்சாலத்தின் தலை நகரம்.

ய. யாரைக் குறிப்பிடுகிறோம்-கண்டு பிடியுங்கள் :

1. இவர் பீஷ்மர், துரோணர், கர்ணனுக்கெல்லாம் வில்வித்தை கற்பித்தவர்.

---

'நெய்வேலி நுனிப்புல்'

---

2. தமக்கு அழகாகப் பணிவிடை செய்தாள் என்பதற்காக ஒரு சின்னக் கன்னிப் பெண்ணுக்குப் போய் குழந்தை பிறக்கும் மந்திரத்தை உபதேசித்த புண்ணியவான்.

3. இவர் மட்டும் ஒரு கட்சியில் இருந்தார். இவருடைய சைனியம் முழுதும் எதிர்க் கட்சியில் போராடின.

4. திரௌபதியைக் கௌரவ சபையில் மானபங்கம் செய்ய நடந்த முயற்சிக்கெல்லாம் வெகு நாள் முன்னர் பாஞ்சாலிமீது தீயச் செயல் புரிய நினைத்து, பீமனால் கொல்லப் பட்டவன்.

ர. பாரதத்தின் ஆரம்பப் பகுதியில் சில கேள்விகள் :

1. தன் மூப்பைப் பிள்ளைக்குத் தந்து, அவனது இளமையை வாங்கிக் கொண்ட மன்னவன் யார்?

2. பீஷ்மருடன் தந்தையின் பெயர் என்ன?

3. பாரதத்தின் முதல் பர்வத்திற்கு என்ன பெயர்?

4. திருதராஷ்டிரன்-பாண்டு-மூன்றாமவன் பெயர் என்ன?

ல. பாரதப் போர் பற்றி :

1. குருட்டு மன்னனுக்கு ரன்னிங் காமெண்டரி தந்தவன் யார்?



ஸ்ரீ பிரம்ராம்பாள் திருக்கோயில் - கோவை சீதாராம்.

2. அம்புப் படுக்கையில் படுத்துக் கொண்டு, சாவதற்குப் புண்ணிய காலம் வரக் காத்திருந்தவர் யார்?

3. நாளை சூரிய அஸ்தமனத்திற் குள் ஜயத்ரதனை மாய்ப்பேன் எனச் சபதம் செய்தது யார்?

4. அபிமன்யூ சிக்கிய வியூகம் என்ன பெயர் கொண்டது?

5. ஓர் அஸ்திரம் பாய்ந்து வருகை யில் கண்ணபிரான் தேரையே கீழே அழுந்தச் செய்தார். அது என்ன அஸ்திரம்?

வ. பெயர் கூறுக :

1. கிருஷ்ண பரமாத்மாவின் சங்கம்.

2. அர்ஜுனனின் வில்.

3. பார்த்தன் சிவபிரானிடம் பெற்ற அஸ்திரம்.

4. வன வாசத்தில் திரௌபதிக்கு உதவிய பாத்திரம்.

கடைசியில ஒரு அவியல் :

1. என் தாய் என்று உறவு கொண் டாடிக் கொண்டு நிறையப் பேர் வந்துவிட்டுப் போயிருக்கிறார்கள் - இப்படிச் சொன்னது யார்?

2. இன்ன குலம் என்பதை மறைத்துவிட்டு நீ என்னிடம் கற்ற வித்தை அவ்வளவும் உரிய நேரத்தில் உனக்கு மறந்து போகக் கடவது— யார் சாபம் இது?

3. கௌரவ சபைக்குத் தூது சென்ற கண்ணபிரான் அஸ்திர புரத் தில் யார் வீட்டில் தங்கிச் சாப்பிட் டார்?

4. பாரதத்தில், இந்த மாதிரி யான ஒரு 'க்விஸ்' பிரசித்தமானது. அங்கு வரும் க்விஸ்மாஸ்டர் யார்? தேறிய மாணாக்கன் யார்?

5. ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமத் தோத்திரம் எந்தப் பர்வத்தில் அமைந்துள்ளது?

6. கண்ணனே தோற்றுப் போன ஒரு நிகழ்ச்சி எது?

7. பாரதத்தை எழுதியவர் யார்? (யோசித்துச் சொல்லுங்கள்.

8. பாரதப் போர் தொடங்கச் சில நாள் முன் கண்ணபிரானின் உதவி நாடிச் சென்றவர்கள் அர்ஜுனனும் துரியோதனும் ஆவர். யார் கால் மாட்டில், யார் தலைமாட்டில் அமர்ந்தனர்?

9. பீஷ்மரின் அன்னை யார்?

10. யுத்த களத்திலே கண்ணபெரு மான் கர்ணனிடம் சென்று என்ன யாசித்துப் பெற்றார்?

11. தன்னைச் சபையில் மதிக்க வில்லை என முதன் முதல் 'வெளி நடப்பு' என்பதைச் செய்து காட்டி யவன் எவன்?

12. துரோணாசாரியர், கிருபா சாரியர், பீஷ்மாசாரியர் என்று எல்லா ஆசாரியர்களும் கௌரவர் பக்கம் தானா? ஒரு ஆசாரியர் கூடப் பாண் டவர் பக்கம் இல்லையா?



மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயிலின் விமானத் தோற்றம்
—சன்மிஷ்டை.

எங்கள் விடைகள் :

க. 1. மகன், 2. மைத்துனன், 3. நாட்டுப் பெண், 4. பேரன், 5. கண்ணனுக்குக் குந்தி அத்தை முறை, 6. ஓரகத்தி.

ங. 1. பலராமர், பரசுராமர்; 2. வருகிறார், 3. படுகிறார், 4. நமக்குத் தெரிந்தவரை, இல்லை.

ச. பீமன், 2. கர்ணன், 3. அர்ஜுனன், 4. திரௌபதி, 5. பீஷ்மர்.

ஞ. அவ்வளவு பேருமே கௌரவர் பக்கம்.

ட. 1. உத்தரை, 2. கிருபி, 3. சுதேஷ்ணை, 4. இப்படிக் கேட்டது மகா பாவம்! நேயர்கள் மன்னித் தருளுக. அவர் மிக உயரிய பிரம்ம சாரி.

ண. 1. பாரதத்தில் 18 பர்வங்கள் உள்ளன.

2. பாரதப் போர் நடந்தது 18 நாட்கள்.

3. பகவத் கீதையில் 18 அத்தியாயங்கள் உள்ளன.

த. 1. திரௌபதியை அழைத்துக் கொண்டு வந்த தனயர்களிடம் குந்தி சொன்னது.

2. கண்ணபிரானிடம் துரியோதனன் கூற்று.

3. கீதோபதேசம், 4. தருமபுத்திரர் யுத்த களத்தில், அப்பெயர் கொண்ட யானை மரித்தபோது சொன்னது, 5. யட்சனிடம் தருமர் சொன்னது.

ந. 1. பிரகன்னளை, 2. 12 தான், 3. மகள், 4. பீஷ்ம பர்வ .

ப. 1. பாரதியாரின் பாஞ்சாலி சபதம்.

2. பி. எஸ். ராமையாவின் தேரோட்டி மகன்

3. ராஜாஜி எழுதிய வியாசர் விருந்து.

ம. 1. குருக்ஷேத்திரம், 2. இந்திரப் பிரஸ்தம், 3. அஸ்தினாபுரம், 4. ஏகசக்ர நகரம், 5. காம்பிலியா நகரம்.

ய. 1. பரசுராமர், 2. துர்வாச முனிவர், 3. கிருஷ்ண பரமாத்மா, 4. கீசகன்.

ர. 1. யயாதி, 2. சந்தனு, 3. ஆதி பர்வம் தான், 4. விதுரர்.

ல. 1. சஞ்சயன், 2. பீஷ்மர், 3. அர்ஜுனன், 4. பத்மம், 5. நாகம்.



பார்வதி சமேத ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி - திருப்பதி

வ. 1. பாஞ்ச ஜன்னியம், 2. காண்டீவம், 3. பாசுபதம், 4. அட்சய பாத்திரம்.

அவியல் :

1. கர்ணன் குந்தியினிடம்.

2. பரசுராமர் கர்ணன்மீது இட்ட சாபம.

3. விதுரர்.

4. யட்சப் பிரசனம் என்ற அந்த வினாடி-வினாவை டத்தியது யட்சன் என்பர். தரும தேவதை என்றும் சொல்வார்கள். வெற்றி பெற்றது தரும புத்திரர்.

5. ஆனுசாஸநிக பர்வம். (சிவ சஹஸ்ர நாமமும் இதில் வருகிறது. அது பிரசித்தம் ஆகவில்லை.)

6. பாண்டவர்க்காகக் கௌரவ சபைக்கு ஐயன் சென்ற தூது தோல்வி தானே?

7. விநாயக பெருமான்.

8. அர்ஜுனன் காலருகிலும் துரியோதனன் தலைப் பககத்திலும் அமர்ந்தனர்.

9. கங்காதேவி.

10. கர்ணனைக் காத்து வந்த தருமத்தையே தானமாகப் பெற்று வந்தார் என்பார்கள்.

11. சிசுபாலன் என்பான், கண்ண பெருமானுக்கு முதல் தாம்பூலம் தந்து ராஜ்சூயத்தில் வரவேற்பு அளிக்கப்பட்டபோது, சபையை விட்டு வெளியேறினான்.

12. சாட்சாத் கீதாசாரியன் இருந்தாரே, மறந்துவிட்டீர்களா? ✤





ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால் செயயப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைக்கும். | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

போன்: கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# தீபாவளி மஹிமை

அகில இந்தியாவுக்கும் உரிய பண்டிகையாகிய தீபாவளித் திருநாள் தோன்றியதைப் பற்றிப் பல ஐதிகங்கள் உண்டு.

மூவடி கேட்ட வாமனப்ரம்மச்சாரியின் பாதத்துக்குத் தன் முடியைத் தந்தவன் மஹாபலி. பரமன் அந்தப் பரம பக்தனின் மீது திரு அடி வைத்து அழுத்திப் பாதாள உலகத்திற்கு அரசனாக அவனை புவிக்கடியில் அமர்த்தினார். அங்கும் அவன் ஹரிஸ்மரணை செய்து பேரானந்தம் எய்தினான். எனினும் தாயுள்ளம் படைத்த லக்ஷ்மிதேவிக்கு அவன் பாதாள இருளிலேயே அடைந்து கிடப்பது மனந்தாளவில்லை. 'மஹாபலிக்கு ஒளிதாருங்கள்' என்று நாதனிடம் வேண்டினாள். 'ஆண்டு தோறும் ஆச்வினைமாத கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியன்று மஹாபலி பூவுலகுக்கு வரட்டும். அன்று அவனுக்காக மண்ணுலக மாந்தர் தீபமேற்றி ஒளிபரப்பட்டும்' என்று ஆக்ஞையிட்டார் பரமன். அந்த நாளே தீபாவளி.

ஸ்ரீராமன், வனவாசம் முடிந்து ஸீதையோடும், லக்ஷ்மணனோடும் அயோத்தி திரும்பிய அன்று நகரமெங்கும் தீபாலங்காரங்கள் ஜொலித்தன. பதினான்காண்டுகளாக இருள் மூடிய அரண்மனையில் தேவி ஜானகியே கௌசல்யாதேவியின் மனம் மகிழத் திருவிளக்கேற்றி வைத்தாள். அத்தினமே தீபாவளி ஆயிற்று.

நரகாசுரனை சத்தியபாமையின் உதவியோடு கண்ணபிரான் சம்ஹரித்த தினம்தான் தீபாவளி என்பதை நாம் அறிவோம். நரகன் மறைந்ததும் அவனது தாய்-பொறுமைக்குப் பூமாதேவியானவள் — கண்ணனை அடைந்து வணங்குகிறாள். உலகத்துக்குத் தீமை செய்த தன் மகனைக் கொன்று அவனுக்கு உயர்கதிஅளித்த மாதவனுக்கு ரத்தின குண்டலங்களும் வைஜயந்தி மாலையும், பீதாம்பரமும், வெண்கொற்றக்குடையும் பரிசளிக்கிறாள். "என் மகனின் நினைவாக இத்திதியில் மக்கள் அனைவரும் தைல ஸ்னானம் செய்து புத்தாடை அணிந்து விருந்துண்டு, தீபமேற்றிப் பண்டிகை கொண்டாட வரமருள்வாய்" என்று பிரார்த்திக்கிறாள். தூய உள்ளம் கொண்ட அந்த அன்னையின் வேண்டுகோளைப் பரமன் அங்கீகரித்ததன் பயனே இன்று நாம் கொண்டாடும் தீபாவளி.

ராஜகுமாரி தீபா, சத்தியமே உருவானவள். அவளது தந்தை "இந்த தேசத்தின் வளத்துக்குக் காரணம் என்ன?" என்று கேட்ட போது தீபாவின் இரு மூத்த ஸகோதரிகளும், "மன்னராகிய தங்களது மாண்புதான் காரணம்" என்று இச்சகம் பேசினர். ஆனால் கடைக்குட்டி தீபாவோ, "திருமகளின் அருளால் தான் இவ்வளவு சுபீட்சங்களும் கூடியுள்ளன" என்றாள். மன்னனுக்குச் சினம் மூண்டது. அருமைக்குமாரியை அரணியத்துக்குத் துரத்தினான். தீபா நாட்டை விட்டுச் சென்றதிலிருந்து வளங்கள் யாவும் குன்றத் தொடங்கின. மழையில்லை, ஆற்றில் நீரில்லை, பயிரில்லை. மன்னனால் இதை மாற்ற ஏதும் செய்ய முடியவில்லை.

வனம் சென்ற நங்கை லக்ஷ்மிதேவியைக் குறித்துத் தவமிருந்தாள். லக்ஷ்மி பிரஸன்னமாகி "நீ இன்றே உன் நாடு திரும்பு. அங்கு ஸகல ஐசுவர்யங்களும் கொழிக்கும்" என்றாள். தீபா தன் தலைநகரை அடைந்தவுடன் மழை பொழிகிறது. வறண்ட பூமியில் பசுமை படர்கிறது. வற்றிய படுகைகளில் நீர் பெருகுகிறது. எங்கும் ஜகஜ்ஜோதி பரவுகிறது.

---


திரு- எஸ். சந்திரமௌளீஸ்வாமி

திருப்பதி.


---

மகளின் பெருமையையும், திருமகளின் அருளையும் புரிந்துகொண்ட மன்னன் லக்ஷ்மி தேவியின் ஆலயத்தில் தீபாவைக் கொண்டே தீபவரிசைகளை ஏற்றி வைக்கிறான். தீபாவளி ஜனிக்கிறது!

நம் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் 1957-ம் வருடம் சென்னை ஸம்ஸ்கிருத காலேஜில் செய்த உபன்யாஸம் பின்வருமாறு:-

ஞான நூல்களில் எப்படிப் பகவத்கீதை எல்லாவற்றையும் விடத் தனிக் கியாதி அடைந்திருக்கிறதோ, அப்படியே தீபாவளி எல்லாப் பண்டிகைகளைக் காட்டிலும் அதிகக் கியாதி அடைந்திருக்கிறது. ஒருசில பண்டிகைகள்பற்றி வடக்கே தெரியும்; தெற்கே தெரியாது. ஒரு ஜாதிக்காரர்கள் ஒரு பண்டிகை கொண்டாடுவார்கள். இன்னொரு ஜாதிக்காரர்கள் கொண்டாட மாட்டார்கள். ஓணம் என்று மிகவும் விசேஷமாக மலையாளத்தில் ஒரு பண்டிகை கொண்டாடுகிறார்கள். நமக்கு அது தெரியாது. விஷு என்று அதேமாதிரி இன்னொரு பண்டிகை அங்கே உண்டு. நமக்கு அதுவும் தெரியாது. வடக்கே இருக்



**ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் திருக்கோயில் - வேலூர்**

இன்றவர்கள் ஹோலி பண்டிகை என்று கொண்டாடுகிறார்கள். சாயத் தண்ணீரை ஒருத்தர் மேல் ஒருத்தர் வீசிக்கொண்டு கூத்தாடுகிறார்கள். அதைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. இப்படி ஒவ்வோர் ஊரில் ஒவ்வொரு பண்டிகை முக்கியமாக இருக்கிறது. ஆனால் தீபாவளி ஒன்றுதான் நம் தேசம் முழுவதும் எல்லா ஜாதிக்காரர்களாலும் எல்லா மதக்காரர்களாலும் கொண்டாடப்படுகிறது. பிறதேசத்திலிருந்து வந்த மக்களைத் தவிர நம்தேசத்திலேயே பிறந்த புத்த ஜைன மதஸ்தர்கள் கூட இந்த பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள். ராமேஸ்வரம் முதல் ஹிமாசலம் வரையில் எல்லோரும் கொண்டாடுகிறார்கள். நாம் எல்லோரும் பட்டாசு வெடிக்கிறோம். வடக்கே தீபஆவளி என்று விளக்குகளை அலங்காரமாக, வரிசையாக வைக்கிறார்கள். அதைப் பார்த்துவிட்டுத்தான் நானும் இருபது முப்பது வருஷமாக, தீபாவளி அன்று மடத்தில் விளக்கு நிறைய ஏற்றச்சொல்லி வருகிறேன். வடக்கே இருக்கிறவர்களுக்குக் கார்த்திகை மாதம் பௌர்ணமிக்கு மறுநாள் ஆரம்பமாகி விடுகிறது. எப்படி இருந்தாலும் வடக்கே இருக்கிறவர்கள், தெற்கே இருக்கிறவர்கள் எல்லோருக்கும் தீபாவளி ஒரே நாளில் தான். "எத்தனையோ பண்டிகைகள் இருக்கின்றன: கர்மாக்கள் இருக்கின்றன. எல்லாவற்றையும் விட இந்தத் தீபாவளிக்கு இவ்வளவு கியாதி, சிரேயஸ் ஏன் ஏற்பட்டது? தீபாவளிக்குப் பெயர் வந்தது எதனால்?" என்று இதைப்பற்றியும் யோசனை பண்ணிக் கொண்டிருந்தேன்.

அஸ்ஸாம் என்ற தேசத்தில் பிராக்ஜோதிஷம் என்ற நகரத்தில் பௌமன் என்று ஒருத்தன் இருந்தான். அவனுக்குத்தான் நரகாசூரன் என்று பெயர். அவன் ஸ்த்ரீகள் சாதுக்கள் போன்றவர்களுக்கு அனேக அக்கிரமங்கள் பண்ணிக் கொண்டிருந்தான். அதிகமான தபஸ் பண்ணினவன்தான் என்றாலும் தாமஸ வரங்களை வாங்கிக்கொண்டு, எல்லோரையும் ஹிம்சை பண்ணிக்கொண்டிருந்தான் அக்கினிக்கோட்டை, வாயுக் கோட்டை என்று பல கோட்டைகளைக் கட்டிக்கொண்டு மஹா ஹிம்சை செய்து லோக கண்டகனாக இருந்தான். சுவாமியே அவதாரம் பண்ணி, அவன் எத்தனையோ பந்தோபஸ்து செய்து கொண்டு இருந்தாலும் பலயுக்திகளைக் கொண்டு அவனைச் சம்ஹாரம் பண்ணினார். சம்ஹாரம் பண்ணின போது அவன் தாயாகிய பூமாதேவி பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டாளாம்.

புத்திர சோகத்தைக் காட்டிலும் ஸ்திரீகளுக்கு வேறு பெரிய துயரம் இல்லை. பர்த்தா மரணமடைகிறான் என்றால் 'நமக்கு இதுவரை கிடைத்து வந்த சவுகர்யம் போகிறதே; இனி நம்மை யார் ரக்ஷிப்பார்கள்? பர்த்தா இல்லாததனாலே பல காரியங்களை நம்மால் செய்ய முடியாது போகுமே; அபசகுனம் மாதிரி ஆகிவிடுமே' என்ற பலகாரணங்களினாலே ஸ்திரீகளுக்கு அதிகமான துக்கம் உண்டாகலாம். இந்தத் துக்கத்திற்குக் கொஞ்சம் சுயநலம்காரணம். ஆனால் புத்திரன் விஷயத்தில் அப்படி இல்லை. எத்தனைக்கு எத்தனை பிள்ளையின் வயசு அதிகமாகிறதோ அத்தனைக்கு அத்தனை அவன் பிரிவினால் மாதாவின் துக்கமும் அதிகமாகிறது. லோகம் முழுக்க சக்ரவர்த்தியாக நரகாசூரன் ஆண்டு வந்திருக்கிறான். இப்படி ஏக சக்ராதிபதியாக ராஜ்ய பரிபாலனம் பண்ணிகொண்டிருந்த புத்திரன் பகவானால் சம்ஹாரம் செய்யப்பட்டு விட்டானே என்ற துக்கம் அந்தத் தாய்க்கு அப்போதுஉண்டாகவில்லை. புத்திரன் போனானே என்று நினைக்காமல், 'பகவான் கையாலே அவனுக்கு மோக்ஷம் ஏற்பட்டதே; அவனுககு பகவானை நேரில் காணுகின்ற பாக்யம் கிடைத்ததே" என்று மிக

வும் சந்தோஷப்பட்டு உடனே ஒரு பிரார்த்தனைப்பண்ணிக்கொண்டாள் "என் பிள்ளை போனது இருக்கட்டும். எனக்குப் பிள்ளைபோன துக்கம் எற்பட்டாலும் லோகதத்தில் இருக்கின்றவர்களுக்கு ஒரு துக்கமும் ஏற்படக்கூடாது. என் பிள்ளை போன இன்றைக்கு எல்லோரும் எண்ணைத் தேய்த்துக்கொண்டு தலை ஸ்நானம் செய்து புத்தாடைகளை உடுத்துக்கொண்டு நல்ல விருந்து சாப்பாட்டைச் சந்தோஷமாகச் சாப்பிடவேண்டும்" என்று அவள் பிரார்த்தனைக் பண்ணிக்கொண்டதாக ஒரு கதை இருக்கிறது. சாகப்போகிற சமயத்தில் பகவானுடைய தரிசனம் கிடைத்ததனால் ஞானம் பெற்ற நரகாசூரனே "இந்த மாதிரி என் நினைவாக ஜனங்கள் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டதாகவும் சொல்லுகிறார்கள். எண்ணைத் தேய்த்துக் கொண்டு வெந்நீரிலே ஸ்நானம் செய்கிறது இருக்கட்டும். "இப்படி ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குக் கங்கையில் ஸ்நானம் செய்தால் எவ்வளவு புண்ணியமோ அவ்வளவு புண்ணியம் வரவேண்டும். மஹாலக்ஷ்மியின் அநுக்கிரஹம் பொங்கவேண்டும்" என்றும் வேண்டிக் கொண்டானாம்.

ஒவ்வொருமாசத்திற்கும் ஒரு புராணம் இருக்கிறது. சைத்ர மஹாத்மியம், வைசாக மஹாத்மியம் என்று ஒவ்வொரு மாசத்திற்கும் இருக்கிறது. துலா மாச மஹாத்மியம் இருக்கிறது. அதில் முப்பது அத்தியாயங்கள் உள்ளன. முப்பது நாளைக்கும் படிக்கலாம். அதிலே தீபாவளியைப் பற்றிச் சொல்லப்படும் அத்தியாயத்தில்

**"தைலே லக்ஷ்மீ: ஜலே கங்கா"**

என்று வருகிறது.

கங்கை இல்லாத ஊர்களில் எந்த இடத்தில் அன்றைக்கு எண்ணைத் தேய்த்துக் கொண்டு வெந்நீரிலே ஸ்நானம் செய்தாலும் கங்கா ஸ்நானம் செய்த புண்ணியம் வருகிறது என்று புராணம் சொல்கிறது. எல்லா ஆசிரமக்காரர்களும் வைராக்ய சீலருங்கூடத் தீபாவளியன்று எண்ணை ஸ்நானம் செய்ய வேண்டும் என்பதாகவும் துலாபுராணத்தில் இருக்கிறது.

அப்யங்கனம், வபனம் எல்லாம் இந்தக்காலத்தில்தான் செய்து கொள்ள வேண்டும் என்று சாஸ்திரம் இருக்கிறது. ஒரு நாளைக்கு ஐந்து காலம்; ஒரு காலத்திற்கு ஆறு நாழிகை. ஒரு நாழிகைக்கு இருபத்து நான்கு நிமிஷம். ஒரு காலத்திற்கு 144 நிமிஷம். அதாவது இரண்டு மணி 24 நிமிஷம் ஆகிறது. சூரிய உதயத்திலிருந்து 8-24 வரையில் உதயகாலம். 8-24ல் இருந்து 10-48 வரையில் சங்கவ காலம். 10-48ல் இருந்து 1-12 வரையில் மாத்யான்ன காலம். 1-12ல் இருந்து 3-36 வரையில் அபரான்ன காலம். 3-36ல் இருந்து 6 மணி வரையில் சாயங்காலம். இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன கர்மாக்களைப் பண்ணவேண்டும் என்று தர்ம சாஸ்திரம் விதிக்கிறது. அப்யங்கனத்தை உதய காலத்தில் பண்ணிக் கொள்ளக் கூடாது. பிராயச்சித்தம், ... ஜபம் ஆகியவை சங்கவ காலத்தி[ல்] பண்ணவேண்டும். உஷ க்காலத்தி[ல்] எண்ணைத் தேய்த்துக் கொண்டா[ல்] கள் போன்றவற்றைத் தேய்த்து கொண்ட பாவம் என்றும், தோஷ[ம்] என்றும் சொல்லியிருக்[கி]றது. ஆனால் இதற்கு நேர் மாறாக, தீபாவளி அன்றைக்கு உஷக்காலத்தி[லே]யே எண்ணைத்தேய்த்துக் குளிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. கொஞ்சம்கூட ஜீவஹிம்சை செய்ய கூடாது என்று சொல்லிவிட்[டு] யாகத்தில் தோஷமில்லை என்[று] சொல்லியிருப்பது போல இது நே[ர்] விரோதமாக இருக்கிறது. உஷ காலத்திலேயே எண்ணைத் தேய்த்து கொள்ளவேண்டும். தேய்த்து கொள்பவர்களுக்கு புண்ணியமு[ம்] வரவேண்டும் என்று நரகாசூர[னு]டைய அம்மா பிரார்த்தித்துக்கொ[ண்]டாள். இதைவிட உயர்ந்த மன[ப்]பான்மை இருக்கமுடியுமா? யார[ா]வது இறந்தால் எண்ணைத் தேய்[த்]துக் கொள்வோமா? புதிய ஆ[டை]களை அன்றைக்கு உடுத்து கொள்வோமா? விருந்துதா[ன்] சாப்பிட மனசு வருமா? தன் பி[...]



குமாரவயலூர் கோயிலும், குளமும்

ளும் அந்தத் தாய் "பகவானே! எனக்கு இருக்கிற துக்கம் என்னுடனேயே இருக்கட்டும். லோகம் துக்கப்படக்கூடாது. இன்றைக்கு எல்லோரும் எண்ணைத் தேய்த்துக் கொண்டு ஸ்நானம் செய்து, புதுப் புது ஆடைகளை உடுத்தி, விருந்துண்டு இந்நாளை பண்டிகை நாளாகக் கொண்டாட வேண்டும். அப்படி எண்ணைத் தேய்த்து ஸ்நானம் செய்கிறவர்களுக்குக் கங்கையில் ஸ்நானம் செய்கிற புண்ணியமும் வரவேண்டும். அவர்களுக்கு பரிபூர்ணமாக மஹாலக்ஷ்மியின் கடாக்ஷம் ஏற்பட வேண்டும்" என்று அவன் அம்மா பூமாதேவி பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறாள். ரணகளத்திலே பகவான் கீதை உபதேசம் பண்ணினாற் போல இவள் பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டுப் புத்திர சோகப்பட்டு அழும்போது லோகக்ஷேமத்தை வேண்டிக்கொண்டிருக்கிறாள்.



இராஜ கம்பீரன் மண்டபம் - ஐராதீஸ்வரர் ஆலயம் - தாராசுரம்

அதனால்தான் தீபாவளியைக் கொண்டாடுகிறோம். அதனால்தான் மற்ற பண்டிகைகளையெல்லாம் விட இதற்கு அதிக கியாதி.

ஏதோ புராணக்கதை என்று தள்ளிவிடாமல் தலைமுறை தலைமுறையாக இதை ரக்ஷித்துக் கொண்டு இந்தப் பண்டிகையையும் நம் நாட்டவர் கொண்டாடி வந்திருக்கிறார்களே, அதனால் நமக்கு என்னபயன்? இந்தப் பண்டிகையைக் கொண்டாடுவதனால் நாம் அடையக்கூடிய ஆத்ம லாபம் என்ன என்று பார்க்க வேண்டும். எதற்கும் மூலத்தைச் சூக்ஷ்மமாக அறிந்து கொண்டால் தான் நிறையப் பலன் கிடைக்கும்.

நமக்கு அநேக துன்பங்கள் இருக்கின்றன. நாம் அன்றாடம் பல தப்புக்கள் பண்ணுகின்றோம். அதற்கு ஏற்றத்துக்கத்தை அநுபவிக்கின்றோம் 'இந்தத் தப்பைப் பண்ணினோம், அதனால்தான் இந்தக் கஷ்டம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது' என்று சில சமயங்களில் நமக்கே தெரிகிறது. இன்னும் சில கஷ்டங்கள் ஏற்படும்போது 'ஐயோ, நான் ஒரு தப்பும் பண்ணவில்லையே! எனக்குக் கஷ்டம் உண்டாகியிருக்கிறதே!' என்று வருத்தப் படுகிறோம். காரணம் தெரியும் போது நம்மை நாமே சமாதானப் படுத்திக்கொள்ளப் பார்க்கிறோம். தெரியாத போது இன்னும் அதிகத் துக்கத்தை உண்டாக்கிக் கொள்கிறோம். எல்லாக் காரியங்களுக்கும் நமக்குக் காரணம் தெரிந்திருக்க வேண்டுமா என்ன? காரணம் தெரியாமல் பல துன்பங்கள் உண்டாகலாம். எப்படி இருந்தாலும் நமக்கு ஏற்படுகிற துன்பம் ஏற்பட்டே தீரும். இருக்கிற துன்பம் இருந்து கொண்டு தான் இருக்கும். நாம் துன்பப்படுகின்றோமே என்பதற்காக மற்றவர்களும் துன்பப் படட்டும், லோகமும் துன்பப்படட்டும் என்ற நினைப்பு நமக்கு வரக்கூடாது. நாம் துன்பப்



ஸ்ரீமல்லிகார்ஜுன ஸ்வாமி கோயில் - ஸ்ரீசைலம்
- கோவை சீதாராம்

பட்டாலும் லோகம் க்ஷேமமாக இருக்கவேண்டும் என்ற மனப்பான்மையை வளர்த்துக்கொள்வதுதான் இந்தத் தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாடுவதன் பயன்; நாம் அதிலிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய நீதி; இந்தப் பண்டிகையை விட்டுப் போகாமல் இவ்வளவு காலமாக இது சம்பந்தப்பட்ட புராணக்கதையையும் காப்பாற்றி வந்திருப்பதற்குக் காரணம் இதுதான்.



ஸ்ரீ நடராஜர் - சுதைச்சிற்பம் - காளஹஸ்தி

மனிதர்களாகப் பிறந்துவிட்டோம். கஷ்டம்தான் நமக்கு எப்போதும் அதிகமாக இருக்கும். சுகம் எப்போதோ வரும். எவ்வளவுக்கெவ்வளவு பெரிய மனிதர்களாக இருக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு பெரிய கஷ்டமாக வரும். மாடியிலிருந்து விழுந்தால் கை, கால், மண்டையெல்லாம் நொறுங்கிப் போகின்றன. திண்ணையிலிருந்து விழுந்தால் சிராய்ப்புகளோடு, சுளுக்கோடு நின்றுவிடுகிறது. அதுபோலவே பெரியவர்களுக்கு அதிகத் துன்பம். சின்னவர்களானால் அவரவர்களுக்கு ஏற்றபடி சின்னக் கஷ்டம், ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் துன்பம் நிறைய வந்துகொண்டேதான் இருக்கும். நம்முடைய துன்பத்தையே நாம் பெரிதாக நினைத்துக்கொண்டிருக்கக் கூடாது. நம்முடைய கஷ்டம் பெரிதே அன்று. நம்மாலாவது உலகம் சிறிது க்ஷேமமாக இருக்குமென்று தெரிந்தால் நம் கஷ்டத்தை மறந்து லோக சுகத்திற்காகப் பாடுபடவேண்டும். 'நம் பிள்ளையை சம்ஹாரம் செய்யும் காரணத்தினாலாவது பகவானைத் தரிசனம் பண்ணக்கூடிய பாக்கியம் கிடைத்ததே' என்பதோடு 'இந்தச் சமயத்தில் நம் பிள்ளை இறந்து போய்விட்டான்' என்று அழுதுகொண்டிருப்பதில் பயன் இல்லை. இந்த ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு நாம் பகவானிடம் லோகமெல்லாம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்றாவது பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்' என்ற ஞானம் நரகாசுரனுடைய தாய்க்கு புத்திர சோகத்திற்கு இடையில் தோன்றியதே! இது ரணகளத்தில் பகவத் கீதை தோன்றியது போலவே இருக்கிறது.



ஸ்ரீ வேங்கடேஸ்வரஸ்வாமி கோயில் - பிட்ஸ்பர்க் (அமெரிக்கா)

ஆகவே தீபாவளிப் பண்டிகை கொண்டாடி, பட்டாசு வெடித்து, விருந்து சாப்பிடுவதோடு நாம் நிற்கக் கூடாது. 'நாம் கஷ்டப்பட்டாலும் படுவோம்'. நம் கஷ்டம் நம்மோடு இருக்கட்டும். லோகமெல்லாம் க்ஷேமமாக இருக்க நம்மால் ஏதாவது செய்ய முடியும் என்றால் அதை உடனே செய்யவேண்டும். நம்மைக் காட்டிலும் லோக க்ஷேமம் தான் பெரிசு' என்ற ஞானம் இன்றைக்கு உண்டாகவேண்டும். அதுதான் பகவானின் சங்கல்பமாக இருக்கும்.



# திருப்பணித் திருடர் திருமங்கை மன்னர்

B. சுந்தரராமன், M.A.B.Ed., - பழமார்னேரி

"கலயாமி கலித்வம்ஸம கவிம்லோக திவாகரம
யஸ்ய கோபி: ப்ரகாசாபி ஆவித்யம் நிஹதம் தம:"
—திருக்கோட்டியூர்நம்பி.

இறைவனடிக்குப் பணிபுரிந்து அவன் கழல் சேர்ந்த அடியார்களின் வாழ்க்கைச் சரிதங்களில் திருப்பணிக்காக வழிப்பறிச் செய்து பிறர் பொருளைச் சூறையாடி நல்வழி தவறியும் நற்கதி அடைந்த தொண்டர்கள் பலர் பலர். அவர்களுள் வழிப்பறி செய்து பிறர் பொருளைக் களவாடி வந்து தெய்வத் திருப்பணியை செவ்வனே செய்து வந்த திருமங்கை மன்னனிடம் ஒரு நாள் திருமாலே மானிட வடிவில் மணக்கோலத்தில் வந்து தன்னை சிக்கவைத்துக்கொண்டு திருமங்கை மன்னனை நல்வழிப்படுத்தி உய்வித்தாரென்பது ஆன்றோர்கள் வாக்கு. ஆழ்வார்கள் பதின்மரில் திருமங்கையாழ்வார் ஒருவராவார். தற்போதைய சீர்காழியை அடுத்த திருவாலி நாட்டை இவர் ஆண்டு வந்தார். ஆலிநாட்டு ஆவலிமாடலன் என்று இவரை மக்கள் அன்புடன் அழைத்தனர். இவரது பட்டத்தரசி குமுதவல்லி அம்மையும் மிகச் சிறந்த விஷ்ணு பக்தை. திருவாலி, திருநகரி, கோலவில்லி, பார்த்தன்பள்ளி, திருநாங்கூர், அண்ணன் கோவில் ஆகிய இடங்களில் இவர் கட்டிய கோயில்கள் இன்றளவும் நிலைத்து நின்று இவர் பெருமைக்குச் சான்று பகருகின்றன.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்தவை பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல் திருவெழு கூற்றிருக்கை என்பனவாகும். மாறன்பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கம் கூற அவதரித்த என்ற ஆசார்ய ஹ்ருத சொற்றொடர் வேதம்நான்கினைப்போன்ற நம்மாழ்வார் அருளிச் செயல்கட்கு அதாவது திருவிருத்தம், பெரிய திருவந்தாதி, திருவாசிரியம், திருவாய்மொழி என்ற நால் வேதங்கட்கு ஒப்பாண பனுவல்கட்கு திருமங்கை மன்னனின் பெரிய திருமொழி முதலிய ஆறு நூல்களும் ஆறு அங்கங்களுமாக விளங்கி நிற்கும் என்பதை விளக்க வந்தது. "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதி தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்ற வேதாந்ததேசிகர் திருவாக்கும் இதனை வலியுறுத்தும்.

இனி, திருமங்கையாழ்வார் கால ஆராய்ச்சியை நோக்குவோம். சோழர்களில் சிறந்தவனான முதலாம் இராஜராஜன் கி.பி. 985 முதல் 1014 முடிய அரசாண்டதாகத் தெரிகிறது. இவன் அரியணை ஏறிய 21ம் ஆண்டு அதாவது கி. பி. 1006ல் கடாரத்தரசன் சூளாமணி வர்மன் நாகப்பட்டிணம் பௌத்த விகாரத்தை ராஜராஜன் உதவியுடன் நிருமானித்து அசல் பொன்னாலான மிகப் பெரிய புத்தர் சிலையை நிறுவியதாக ஆனைமங்கல செப்பேடுகள் கூறுகின்றன. திருமங்கை மன்னன் இந்த புத்த விகாரத்தைத் தகர்த்து புத்தர் சிலையைக் கவர்நது அதன் மூலம் திருவரங்கத் திருப்பணியை கி.பி. 11-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் முடித்ததாகத்தெரிகிறது. எனவே கி. பி. 11ம் நூற்றாண்டின் முற்பகுதியில் திருமங்கை மன்னன் இருந்திருக்க வேண்டும்.

அன்றியும், கி. பி. 7ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த அப்பர் பெருமான்,

"பெருக்காறு சடைக்கணிந்த
பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ
டெட்டும்"

என்று கூறுவார். பெருங்கோயில் என்றால் யானை ஏறமுடியாத மாடக்கோயில். இவற்றைக் கட்டியவன் கோச் செங்கணான். மங்கை மன்னன்

"எண்டோளீசற்கு எழில் மாடம்
எழுபது செய்து உலகாண்டான்"

என்று கோச் செங்கணானைக் குறிப்பார். நாவுக்கரசர் 78 மாடக் கோயில் என்று குறிப்பதை மங்கையர் கோன 70 என்று குறிப்பதிலிருந்து நாவுக்கரசர் காலத்தில் 78 ஆக இருந்த மாடக்கோயில் எட்டு அழிபட்டு மங்கை மன்னன் காலத்தில் 70 ஆக இருந்திருக்க வேண்டும். எட்டு கோயில் அழிபட குறைந்தது 400 ஆண்டு ஆகியிருக்கலாம். எனவே கி. பி. 7ம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பர் காலத்திலிருந்து நான்கு நூற்றாண்டுகள் பின் நோக்கி கி. பி. 11ம் நூற்றாண்டில் திருமங்கை மன்னன் இருந்திருக்க வேண்டுமென்று வரலாற்றாசிரியர்கள் கருதுவர்.

இனி இவ்வாழ்வாரின் பாடற்சிறப்பினைக் கண்டு தெளிவோம். 'எந்தை தந்தை தம்மான என்று எமர் ஏழளவும் வந்து நின்ற தொண்டரோம்' எனறு திருமஙகை மன்னன கூறுவதால் இவர் வைணவக் குடியினர் என்பது தேற்றம்.

'கள்வனேன் ஆனேன் படிறு செய் திருப்பேன் கண்டவா திரிதந்தேன்' என்றும் 'கொன்றேன் பல்லுயிரைக் குறிகோளொன்று இல்லாமையினால் என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்' என்றும் 'பெரு நிலத்தார் உயிர்க்கெலாம் செற்றமே

வேண்டித் திரிதருவேன்' என்றும் இத்திருமங்கை மன்னன் அருளிச் செய்வனவற்றைக்கொண்டே நலம் தரும் நாமமாகிய நாராயண னைக் கண்டு கொள்வதற்கு முன்பு ஆத்மாவை பகவத் விஷயத்தில் ஈடு படுத்தாமல் ஆத்மாவை வெய்யிலிலே வைத்து உடம்பை நிழலிலே வைத் தவர் என்ற பரியவாச்சான்பிள்ளை திருவாக்கிற்கொப்ப விளங்கினா ரென்று தெரியவருகிறது.

இவர் தாம் நடத்திய கள்வர் தொழிலினைத் தவிர்த்து உள்ள மெலாம் உருகிக் குரல் தழுதழுக்க உடம்பெல்லாம் கண்ணீர் சோர நள் ளிருள் அளவும் நாராயணா என் றழைப்பாராயினார். 'பேராளன் பேரோதும் பெரியோரை யொரு நாளும் பிரிகிலேனே' என்று தாம் அடியார்க்கு அடியனாந்தன்மையினை யும் வாயாரப் பாசுரமிட்டுப் பாடி னார். 'எம்பெருமான் தாள் தொழு வார் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்றாரே' என்று தாம் தொண் டர்க்கு தொண்டனாகும் தன்மை யினையும் உணர்த்தினார்.

"முசுவண்டு முரலும் கண்ணிமுடி யீர் உம்மைக் காணும் ஆசையென் னும் கடலில் வீழ்ந்து இங்கு அயர்ந் தோம்" என்ற நிலையினை அடைந்த ஆழ்வார் 'ஓதி ஆயிர நாமங்கள் உணர்ந்தவர்க்கு உறுதுயரடையாமல் ஏதமின்றி நின்றருளும் நம் நெடுந் தகை 'எழுந்தருளி உள்ள திருப்பதி களைக் கண்ணாரக் கண்டு களித்து கவிபாடப்புறப்பட்டார். அவர் அனு பவித்த சில வைணவப் பதிகள் விவரம் பின் வருமாறு: முழுதும் விரிக்கின் கட்டுரை மிகும். கடல்மல்லைத்தல சயனத்தில் 'பிணங்களிடு காடதனுள் நடமாடும் பிஞ்ஞகனோடு இணங்கு திருச்சக்கரத்துஎம்பெருமானார்'திரு வுருவைக் கண்டுகளித்தார். சிறுபுலி யூர்த் தலசயனத்தில் 'பிறை தங்கு சடை முடியானை வலத்தே வைத்து பிரமனைத் தன் உந்தியிலே தோற்று வித்துக் கறை தங்கு வேற்றடங்கண் திருவை மார்பில் கலந்தவன்' ஆகிய திருமாலைக் கண்டு அகமகிழ்ந்தார். திருக்கண்ணபுரத்துறைப் பெரு மானை, "பாடிலால உன்னை என் நெஞ்சத்து இருந்தமை காட்டி னாய் கணணபுரத்து அம்மானே' என்று திருவாய் மலர்ந்தருளிப் புகழ்ந் தார். கூத்தனாரும் தில்லைத் திருச் சித்திரக்கூடத்தில் கோவிந்தராஜ பெருமாளை வணங்கி 'கானாட மஞ் சைக் கணமாட மாடே கயலாடு பழ னம் புடைபோய் தேனாட மாடக் கொடியாட' என்பதாக எல்லாமே ஆடுவதாகக் கண்டார்.

பல்லவ மன்னன் பரமேச்வர வர்மன் எழுப்பிய பரமேச்வர விண் ணகரத்தைக் கண்டவுடன் 'பலராய் பல வேந்தர் வணங்கு கழற்பல்லவன்' என்று அவ்வரசனைப் புகழ்ந்தார். சோழன் செங்கணான் உருவாக்கிய திருநறையூர்க் கோயிலைக் கண்ட வுடன் "இலங்கிலங்கு திருமொழி வாய் எண்டோளீசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட திருக்குலத்து வளச் சோழன்" என்று செங்கணானைப் புகழ்ந்து பாடினார்.

திருவல்லிக்கேணிப் பெருமாளை 'பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைப்பப்பிறையெயிற்று அனல்விழி பேழ்வாய்த்தெள்ளிய சிங்கமாகிய தேவைத் திருவல்லிக்கேணி கண் டேனே' என்று பாராட்டிப் பாடி யருளினார்.

இத்திருமங்கை ஆழ்வாரது பாசு ரங்களில் அகப்பொருட்சுவை ததும் பிய பாசுரங்கள் பலப்பல. தலைவி தலைவனிடத்தில் வண்டினையும் நாரையினையும் தூது விடுகிறாள். தலைவியாகத் தானிருந்து பக வானைத் தலைவனாக ஆழ்வார் பாவிக்கிறார்.

"தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே
பூவிரிய மது நுகரும் பொறிவரிய சிறுவண்டே
தீவிரிய மறை வளர்க்கும் புகழாளர் திருவாலி
ஏவரி வெஞ் சிலையானுக்கு என் நிலைமை உரையாயே"

என்று வண்டினைத் தலைவி தூது விடும் பகுதி நயக்கத்தக்கது. தலைவி தலைவன் வருவதற்காகக் குயிலைக் கூவும்படியும், பல்லியை நற்சொல் கொட்டும்படியும் வேண்டுவன இவ ரது பாசுரங்களில் சாற்றப்பட் டுள்ளன.

"கரையாய் காக்கைப்பிள்ளாய்
கருமா முகில்போல் நிறத்தன்
உரையார் தொல்புகழ் உத்தமனை
வரக்கரையாய் காக்கைப் பிள்ளாய்"

என்பவை போன்றவை குறிப்பிடத் தக்கன. தலைவி தலைவனாகிய பெருமாளின் பிரிவினால் ஆற்றாமை விஞ்சித் தோழியை நோக்கித் தலை வனது ஊருக்கே செல்லலாம் என்று கூறுவதுபோலமைந்த திருப்பாசுரங் களை ஆழ்வார் அமைத்துள்ளார்.

"நல்லவர் திறம் நாமறிவோம்
நாண் மடம் அச்சம் நமக்கிங்கில்லை
மாமணி வண்ணனை நாம் மறவோம்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடு மின்"

என்று தோழியைத் தலைவி வேண்டு வது இரங்கற்பாலது. உலகத்தோர்க்கு அறிவுரையாக "என்றும் தேனும் பாலும் அமுதமாகிய திருமால் நாமம் நானும் சொன்னேன் நமரும் உறை மின் நமோ நாராயணமே", என்று உபதேசித்து ஐம்புலன் அடக்கி ஐம் பொறிகளையும் ஆண்டவன் திறத்தி லேயே பயன்படுத்துமாறு ஒரு பதிகத் தில் மங்கையர்கோன் விளக்குகிறார்.

காற்றிடைப்பட்டகலம் போலவும், ஆற்றருகமைந்த மரம் போலவும், பாம்பொடு ஒரு கூரையில் வாழ்வார் போலவும், இருபாடு எரி கொள்ளி யின் உள் எறும்பு போலவும் வருந்தி, உலகியல் தொடர்பை அறவேவிடுக்கக் கருதி இறைவனை வேண்டி அவன்

றன் அருட்கருணையினால் 'பிறப் பொடு மூப்பொன்றில்லவன் தன்னைப் பேதியா இன்பவெள்ளத்தை, இறப்பு எதிர்காலக் கழிவுமானானை எம்பெருமானைக் கண்டு நான் வாழ்ந் தொழிந்தேனே' என்றபடி நித்யசூரிகளில் ஒருவராயினார்.

'மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்' என்று எம்பெருமானாரும்' 'மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று கோலிப்பதிலிருந்த கொற்றவனே' என்று எம்பாரும் அருளிச் செய்வன வடிவழகிய நம்பிதாசர் குரு பரம் பரையில் உள்ள திருமால் இவரை நன்னெறிப்படுத்திய சரித்திரத்தை நினைவூட்டும். வானிட்ட கீர்த்தி வளர்கூரத்தாழ்வார் மங்கை மன்னனின் திருப்பாடல்களை 'தமிழ் நன்னூல் துறை அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம்' என்று மொழிந்தருளுவதாலும் இவர் தம் திருப்பாடல்களின் ஏற்றம் போதரும். அன்றியும் 'பொய்ம்மொழி ஒன்றில்லாத மெய்ம்மையாளன் புலமங்கைக்குக் குலவேந்தன்' என்றும், 'அங்கமலத் தடவயல் சூழ்ஆலிநாடன் அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம் கொங்குமலர்க்குழலியர்வேள் மங்கை வேந்தன் கொற்றவேற்பரகாலன்' என்றும், 'கற்றார் பரவும் மங்கையர் கோன்' என்றும் இவ்வாழ்வார் பலபடியாகச் சிறப்பிக்கப்படுகிறார்.



தேவி அன்னபூரணி - கோவை ஜீதாராம்

வடநாட்டில் ஹரிபாலர் என்ற பக்தர் திருமங்கை மன்னனைப் போலவே வழிப்பறிச்செய்துஅடியார்கட்கு அமுதளித்து முடிவில் ஆண்டவனால் நல்வழிப்படுத்தப்பட்டதாக பக்த விஜயம் கூறுகிறது.

திருமங்கை மன்னன் அர்ச்சா மூர்த்தியாக எழுந்தருளியுள்ள தலம் திருநகரி. சீர்காழியிலிருந்தும் திருவெண்காட்டிலிருந்தும் இதை அடையலாம். தை அமாவாசையன்று திருநாங்கூரில் நடக்கும் கருடசேவையில் மங்கை மன்னன் வழிபட்ட அனைத்துப் பெருமாளும் எழுந்தருளுவர். திருமங்கை மன்னனை திருநகரியிலிருந்து அன்று இரவு எழுந்தருளச் செய்து அவர் தம் பாசுரங்கள் அனைத்தையும் ஓதுவது காணக் கிடைத்தரிய காட்சி. மங்கைமன்னன் புகழ் ஓங்குக!

"கலந்த திருக்கார்த்திகையில் கார்த்
திகை வந்தோன் வாழியே
காசினியிற்குறையலூர்க் காவலோன்
வாழியே
நலந்திகழாயிரத் தெண்பத்து
நாலுரைத்தான் வாழியே
நாலைந்தும் ஆறைந்தும் நமக்குரைத்
தான் வாழியே
இலங்கெழு கூற்றிருக்கை இருமட
லீந்தான் வாழியே
இம்மூன்றில் இருநூற்று ஒரு பத்தே
ழீந்தான் வாழியே
வலந்திகழும் குமுதவல்லி
மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்
வாழியே"



(சென்ற இதழின் தொடர்ச்சி)

# பழமொழிகள் பகரும் பண்புகள்

## ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது

உடற்பயிற்சியோ, கல்வியோ, அவற்றை ஐந்து வயதில் அப்பியாசம் தொடங்காமல் ஐம்பது வயதிற்கு மேல் தொடங்கினால் பயன் பெற முடியாது என்ற பொதுக்கருத்தைத்தான் யாவரும் அறிவோம்.

இதே பழமொழி கிராமப் புறங்களில் விவசாயத் தன்மைக் கேற்ப மாறுபட்டும் வழங்கப்படுகிறது. "ஐந்தில் விளையாதது ஐம்பதில் விளையாது" என்று கூறுவர். ஐந்து நாட்களுக்குள் விதைத்த விதைகள் முளைக்காவிட்டால் ஐம்பது நாட்களில் முளைப்பது இல்லை. எனவே விதைத்த ஐந்து நாட்களில் முளை விட்டால் சிறந்து பயிர் விளங்கும். தாமதமானால் அவ்விதைகள் பயனற்றவை என்று கூறுவர். அந்தந்த இடங்களுக்கேற்ப அற்புதமாகப் பொருந்தும் பொருள் கொண்டதால் பழமொழிகள் பெருமை பெற்று நிலைத்து நிற்கின்றன.

திரு. வெ. சுந்தரமய்யர்,
பரமக்குடி.

சைவர்கள் தரும் விளக்கமாவது! ஐந்தெழுத்து மந்திரமான பஞ்சாட்சர மந்திரத்தை தினமும் பக்தியுடன் ஜெபிக்க எல்லா வெற்றிகளும் உடன் வந்தெய்தும், ஒன்றிலே மனம் ஒன்றாது பல்வகையிலும் மனத்தை அலையவிட்டால் ஏது வெற்றி? பல்வகையான தெய்வத்தையும் பணிந்தாலும் மனம் ஒன்றுபட்டு பஞ்சாட்சர மந்திரமான ஓம் "நமசிவாய" என்பதை திடமாக ஓதி உடன் கொண்டால் பல்வேறு மனமாறுபாடுகள் ஏற்படாது.

ஐம்பொறிகளுக்கும், ஐம்பூதங்களுக்கும் இறைவன் காரணமாகி நின்றமையால் ஐந்தெழுத்து நாயகனாக நமக்கு அருள் பாலிக்கின்றான். எனவே ஐந்தெழுத்தாம் "ஓம் நமசிவாய"வை தினம் ஓதி இறையருளைப் பெறும் சக்தியைக் கொள்ள வேண்டும்.

ஒன்றையே நினைந்து மனம் ஒன்றிய நிலையில் வழிபடவேண்டும். ஐந்து வயதில் குருஉபதேசம் பெற வைத்து திருவருள் பெற வழி வகுக்க வேண்டும் என உணர்த்துவதாகும்.

இந்த அற்புத விளக்கத்திற்காக எழுந்தது உயர்வு மிக்க "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது" என்னும் பழமொழி. ஐந்தெழுத்து நாயகனாம் ஈசனை வழிபட்டு நல்லருளை வளைத்துப் பிடிப்போம்.

## "ஆமை புகுந்த இடம் அடியோடு நாசம்"

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து"

என்று வள்ளுவப் பெருந்தகை கூறினார். திருமாலோ தனது அவதாரங்களில் ஒன்றாக கூர்மாவதாரம் கொண்டார். இவ்வாறு ஏற்றம் பெற்ற ஆமை வீட்டில் நுழைந்து விட்டால் விபரீதம் விளையும் என மக்கள் நம்புகின்றனர்.

ஐம்பதாயிரம் ரூபாய் கொடுத்து இடம் வாங்கினார் அன்பர் ஒருவர். அதில் கட்டடம் கட்ட அஸ்திவாரம் எழுப்பிவிட்டார். சில நாட்கள்கழித்து மேற்கொண்டு வேலை பார்க்கலாம் எனநிறுத்தி வைத்திருந்தார். ஒரு நாள் தரை மட்டத்திற்குமேல் இரண்டடி உயரம் எழும்பியுள்ள சுவரில் ஓர் ஆமை இருக்கப்பார்த்துவிட்டார். சுவரோரமாக உள்ள சாய்ந்துள்ள மணல் மேட்டின் வழியாக வந்த ஆமையைக் கண்டவர் வேதனைப் பட்டார். இதுவரை இடம் உட்பட எண்பதாயிரம் ரூபாய் வரை செலவு செய்தவர் இருபதனாயிரம் ரூபாய்க்கு ஒருவருக்கு விற்றுவிட்டார். இப்படி மூட நம்பிக்கையை வளர்த்துள்ள பழமொழியை சற்றே சிந்தித்தால் உண்மை உணரமுடியும்.

இங்கு கூறப்பட்ட "ஆமை" என்பது நீர் நில வாழ் பிராணியான ஆமை அல்ல. மனித மனத்தில் ஆமை புகுந்தால் அந்த இடமாகிய மனம் நாசமடைந்து, தன்னையும், தன் பொருளையும் நாசமாக்கி நலன் யாவையும் நாசமாக்கி விடும் என்பது தான் உண்மையாகும்.

மனத்துள் புகும் ஆமையா? அது எந்த ஆமை? அவைதான் அறியாமை, பொறாமை, கல்லாமை, பக்தி கொள்ளாமை, தொண்டு செய்யாமை, எளியர்க்கு இரங்காமை, பெரியோரைப் பணியாமை போன்ற ஆமைகள் ஆகும். கல்லாமை நீங்கக் கற்று, அறியாமை நீங்க ஆன்றோரைச் சார்ந்து, அடியார்கள் மூலம் பகதி மிகக் கொண்டு, தொண்டு செய்வதே தூய பணி என்று செயல் கொண்டு, எளியர்க்கிரங்கி மனத்தில் பொறாமை வராமல் திருவருள் ஒன்றையே திடமாக நிலைநிறுத்த வேண்டும்.

பொறாமைதான் அழிவுக்கு என்றமைந்த ஆயுதம். பொறாமை புகுந்த இடத்தில் அன்பு இல்லை,

அறம் இல்லை, இன்பம் இல்லை, இறைவனும் இல்லை. எனவே துயர் தரும் ஆமையாம் பொறாமை புகுதற்கு இடம் தராமல் பக்தியை வளர்க்க உயர்வு வரும் என்ற கருத்தில் தோன்றிய பழமொழியை பொருள் மாற்றி உயிர்ப்பிராணி மீது வீணாகப் பழி சுமத்துவது எவ்வகையில் நியாயம்?

மனத்தில் பொறாமை நீக்கி, அறியாமை அகற்றி அவன்தாள் நிறுத்தி உயர்வு பெற முயற்சிப்போம்.

## ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

சர்வசாதாரணமாக ஒற்றுமைக்கு வலியுறுத்தும் அற்புதமான பழமொழியாகும். மகாகவி பாரதி கூட

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு -நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும்
தாழ்வு"

என்று பாடியுள்ளார். இதை அறியாதார் யாருமில்லை. ஒற்றுமைக்கு ஏற்றம் தரும் உயரிய பழமொழியின் அதன் உண்மைப் பொருளை உணர வேண்டாமா?

ஐம்பொறிகளின் பணியின் பின்னால் நம்மனம் சென்று கொண்டிருக்கின்றது. அதை மாற்றியமைத்து ஐம்பொறிகளையும் அடக்கி மனத்தின் வழியில் செல்லுமாறு அமைக்க வேண்டும். ஐம்பொறிகளும் ஒன்று பட்டு ஒரே மனநிலையில் இறைவனை வழிபடவேண்டும்.

இறைவழிபாட்டின்போது கண் வேறுபக்கம் நோக்காமலும் காது வேறு சொல்லைக்கேளாமலும், நாசி நுகர்தலை நீக்கியும், வாய் இறைவன் திருமந்திரங்களைஉச்சரிப்பதும், உடல் அவனடி பணிவதுமாக அமைந்து மனத்தில் இறைவனை நிலைநிறுத்த வேண்டும்.

இதயத் தாமரையில் இறைவனை வீற்றிருக்கச் செய்தால் ஐம்பொறிகளும் அவன் அருள் நோக்கி ஒன்று பட்ட செயல்தான் அமையும். இதன் காரணமாக பேரின்பப் பெருவாழ்வு என்னும் வீடு பேறுகிட்டும். இக் கருத்தை வலியுறுத்தவே "ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்ற தத்துவ நெறி விளக்கும் பழமொழி தோன்றியது. எனவே எத்தனை துன்பங்கள், பணிகள் அமைந்தாலும் இறைவனை வழிபடும் நோக்கத்தில் ஐம்புலனும் ஒன்றாக வழிபட்டு உயர்வு பெற முயற்சிப்போம்.

## காற்றுள்ள போதே தூற்றிக் கொள்

அறுவடை செய்த தானியங்களில் பதர் நீக்க காற்றுள்ள போது தூற்றுவார்கள். இதை உணர்த்து முகமாக விவசாயிகள் "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்" என்று கூறுவது வழக்கமாகி உள்ளதாகும்.

சந்தர்ப்பம் அமையும் போது செயல் செய்து வெற்றிபெற வேண்டும் என்ற பொருளில் நிலவி வருகின்ற பழமொழியாக இன்று விளங்கி வருகின்றது. இதன் உண்மைப்பொருள் யாது என்று உணரும் போது பழமொழியின் உயர்வு விளங்கும்.

உடலாகிய தன்மைக்கு "மெய்" என்று கூறுவது பழக்கம். ஏன்? பொய்யான உடலை மெய் என்பது எதனால்? உடல் பொய்யானது தான். ஒரு நாள் அழியக் கூடியது தான். ஆனால் அவ்வுடலினுள் இயங்கும் சக்தியாக இருப்பதுகாற்று. காற்றின் தன்மையால்தான், இவ்வுடல் அழியக்கூடியதாயினும் "மெய்" என்ற பெயர் பெற்றது.

உடலுக்கு நோய் வரும் போது, தளர்ச்சியும், செயல்பாட்டில் மாறுதல்களுமநேரும். காற்று நின்று விட்டால்உடலின் செயல்ஏதுமின்றி செயலற்று விடும். பொய்யான இவ்வுடல் மெய்யாக விளங்க திடமான செயல் பாடுகள் செய்யும் திறன் பெற்றிருக்கும் போதே, இன்பம் தராத தீயவற்றைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

உயிராகிய காற்று உடலில் நிலைத்து உடலைச் செம்மையாக வைத்திருக்கும் போதே இறைப் பற்றை நிலை நிறுத்தி தேவையற்றவற்றை நீக்கிக் கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தத் தோன்றியது "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்பதாகும்.

தீயன நீக்கி நல்லனவாம் இறைப் பற்றை நாளும் நிலைநிறுத்தி வையத்தில் வாழ்வாங்கு வாழ உயிர்க்காற்று உடலில் இருந்து உடலை செம்மையாய் வைத்திருக்கும் போதே மெய்ப்பொருள் நாட தீயவற்றைத் துறக்க வேண்டும் என்ற அற்புதப் பழமொழியாகும்.

## அடி உதவுவது போல் யாரும் உதவமாட்டார்கள்

சொல்லியதைச் செய்யாவிட்டால் அடித்துஉதைத்துச்செய்யவைக்கின்ற போது அடிக்குப் பயந்து செயல்பட வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. வன்முறைக்கு வழிகாட்டும் இச் சொல்லை நமது முன்னோர் பயன்படுத்தியிருப்பார்களா? நிச்சயமாக இப்பொருளில் பயன்படுத்தியிருக்க மாட்டார்கள். அவ்வாறாயின் உண்மைப் பொருள் யாது?

இறைவன் எத்தனையோ அவதாரங்கள் எடுத்தாலும் எத்தனையோ தலைகள், கைகள் கொண்டாலும் இரண்டே பாதங்களுடன் காட்சி தருவதைக் காண்கின்றோம். மனித மனம் அலைபாயும் தன்மையது. எந்தக் காலைப் பற்றிக் கொள்ள வேண்டும் எனத்திணறும் தன்மை ஏற்படக் கூடாது. மனிதனின் இரு கரங்களாலும் இறைவனின் இரு பாதங்களையும் பற்றிக் கொள்ள வேண்டும் என்ற காரணத்தால் இரண்டு கால்களால் காட்சியளிக்கின்றான்.

திருவடிதீட்சை என்பது திருவருள் நிரம்பப் பெற்றது. திருவடி மகிமை பற்றி தெய்வத்திரு அடியார்கள் மிக உன்னதமாகப் போற்றிப் புகழ்ந்துள்

ளார்கள். இறைவன் திருவடிஒன்றே உயர்வுக்கு உறுதுணையாகும். இறைவன் திருவடிக்கு ஈடாக உலகில் வேறு ஏதுமில்லை. இறைவன் திருவடி உதவுகின்ற நிலை போல வேறு எந்த உறவும் உதவ முடியாது என்பதை நமக்கு உணர்த்துவதே "அடி உதவுவது போல யாரும் உதவ மாட்டார்கள்" என்பது.

எனவே இறைவன் திருவடியைப் போற்றி இன்ப வாழ்வு என்றும் கொள்ள முயற்சிப்போம். நன்மை நாளும் நிலவ பக்தியை நாட்டுவோம். திருவடி தொழுது திருவருள் பெறுவோம்.

## அகத்தின் அழகு முகத்தில் தெரியும்

அகம் என்பது மனமாகும். மனத்தில் உள்ள உணர்வுகள் யாவும் முகத்தில் பிரதிபலிக்கும். இதை யாவரும் உணர்ந்திருந்த போதிலும் சில கபட நாடக சூத்ரதாரிகளின் செயல்கட்கும் அவர்களதுமனத்தின் எண்ண ஓட்டங்களுக்கும் வேறுபாடு உள்ளதை எளிதில் காணமுடிவதில்லையே!

அவர்களோடு நெருங்கிப் பழகினாலும் உள்ள உணர்வுகளை உள்ளபடி கண்டறிய முடியவில்லையே! இது தவிர "கடல் ஆழம் அறியலாம் மன ஆழம் அறிய முடியாது" என்று கூறுகிறார்களே! இவ்வாறு பல்வேறு தன்மைகட்டு இடையில், "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்பதன் உண்மைப் பொருள் எதுவாக இருக்க முடியும்?

மனமாகிய அகத்தில் இறைவனை வீற்றிருக்கச் செய்தால், இறைவனின் பேரொளி எங்கும் பரவி முகத்தில் தெய்வ ஒளியைத் தோற்றுவிக்கும். இறைப் பக்தியுடன் ஏந்த ஒரு செயலையும் செய்யும் போது இறைவன் துணை நமக்குக் கிட்டுகிறது. செய்யும் செயல்பாட்டில்

# 'ஆழ்வார் திவ்யப் பிரபந்த' திட்டம்

வைணவச் சமயத்தின் அருமை பெருமைகளை, சாமான்யரும் அறிந்து இன்புறும் வகையில் "ஆழ்வார் திவ்யப் பிரபந்த" திட்டம் ஒன்றினை திருமலை திருப்பதி தேவஸ்தானம் விரைவில் செயல்படுத்த உள்ளது.

இத்திட்டத்தின் கீழ் வைணவ சமய இலக்கியங்களை வெளியிடல், இலக்கியம் மற்றும் திவ்ய தேசங்கள் பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளல், ஸ்ரீமந் நாராயணனுடைய வைபவங்களைக் கூறிடும் ஆழ்வார், ஆசார்யர்களின் இலக்கியச் சுவையினை யாவரும் பருகிடும் வகையில் கலை நிகழ்ச்சிகளை நிகழ்த்துதல் போன்றன மேற்கொள்ளப் பட உள்ளன. பல்வேறு தகவல் துறை சாதனங்கள் இத்திட்டத்திற்கெனப் பயன்படுத்த உத்தேசிக்கப்பட்டுள்ளது.

சமூக மற்றும் சமய உட்பூசல்களும், குழப்பங்களும் தமிழ்நாட்டினைத்தாக்கிட்ட ஒருகாலக்கட்டத்தில், மயர்வற மதிநலம்அருளப்பெற்ற ஆழ்வார்கள் ஸ்ரீய; பதியான ஸ்ரீநிவாசனனின் ஸ்வரூப, ரூபகுணங்களை அநுபவித்து அளித்திட்ட நாலாயிரத் திவ்யப்பிரபந்த பாக்கள் வைணவ இலக்கியத்திற்கு மட்டுமின்றி இந்துசமயஉலகத்திற்கும் ஓர் மறுமலர்ச்சியினையும், விழிப்புணர்ச்சியினையும் தோற்றுவித்தன என்றேகூறலாம். பல திவ்ய தேசங்களுக்கும், ஆழ்வார்களுக்கும் இடையே அமைந்த உறவு புராண, இலக்கிய, சரித்திர உண்மைகளை விளங்க உரைக்கும் பான்மையன. பின்னர் தோன்றிய வைணவ உடலாகக் கருதப்படும் ராமானுஜர் உள்ளிட்ட பல்வேறு ஆசார்யர்களுக்கு உள்ளமாக ஆழ்வார்கள் விளங்கினர். ஆழ்வார் ஒவ்வொருவரும் கீதையை உடலாகக் கொண்டு, உபநிஷத்துக்களை மூச்சாகக்கொண்டு, நடமாடும் கோயில்களாக, சமய உணர்வுகளின் ஊற்றாக விளங்கினர் என்றே கூறலாம்.

இவ்வகையில் ஆழ்வார்கள் புகழ் பாடும் இத்திட்டம் நன்முறையில் செயலாற்றிடத்தங்களுடையமேலான ஆலோசனைகளைக்கீழ்வரும் முகவரிக்கு அனுப்பிவைக்குமாறு வாசகர்களையும், சமயச்சான்றோர்களையும் கேட்டுக்கொள்கிறோம்.

டாக்டர் ஆர். சூர்யநாராயண மூர்த்தி,
மக்கள் தொடர்பு அலுவலர்,
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி - 517 507, ஆ. மா.

ஈடுபாடு மிகவாகின்றது. இறை யுறையும் மனத்தில் இன்பம் நிலைக்கும். இன்பத்தில் இணைந்த பொலிவை முகம் தெளிவாகக் காட்டும். இறையருள் நிரம்பிய மனத்தவர்களது முகம் மற்ற முகங்களிலிருந்து மாறுபட்டு அழகின் இருப்பிடமாக அமைகின்றது.

செயற்கைப் பொருள்களால் ஒப்பனை செய்யும் முக அழகு ஒப்பனை கலைந்ததும் மாறுபடுகிறது. உள்ளத்தில் இறைவனை நிலைநிறுத்திய அடியார்கள் முக அழகுக்கு ஈடுஇணை இல்லை. தெய்வ வழிபாடு ஒன்றே மனத்தில் தூய்மையும், தெளிவும் தந்து அதை அற்புதமாக முகத்தில் பிரதிபலிப்பதாகும். பக்தியால் இறையை மனத்தில் நிலை நிறுத்த, பேரழகு முகத்தில் பொலிவாகும் என்பதை உணரும்போது வேறு தீயதான பொறாமை, வஞ்சகம், சூது போன்றவை இல்லாது ஒழியும் என்பதும் தெளிவாகின்றது. நாமும் அப்பேரழகு நம்மிடம் நிறைவாக்க முயல்வோம், இதயத் தாமரையில் இறைவனை நிலைபெறச் செய்வோம்.

## பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்

பாம்பைப் பார்த்தவுடன் யாவரும் பயம் கொள்வதைக் குறிக்கும் பழமொழியாக விளங்கி வருகிறது. உண்மையில் "பாம்பைக் கண்டால் படை ஒடுங்கும்" என்பதாகும்பேச்சு வழக்கில் "ஒடுங்கும்" என்ற சொல் நடுங்கும் எனமாறி சூழ்நிலைக்கேற்ப பொருள் தருவதாயிற்று. ஒருவனாகவே பாம்பை அடித்துக் கொல்லும் போது எவ்வாறு இது பொருந்தும்?

பாம்பை அணிகலனாகக் கொண்டவன் சிவபெருமான். ஆதிசேசன் என்ற நாகத்தைப் பஞ்சணையாகக் கொண்டவன் திருமால். இவ்விரு கடவுளையும் தரிசிக்கும் போது நமது கண்முன் தோன்றுவது நாகமன்றோ?

இறைவனை வழிபடும்போது நம்முடன் இணைந்துள்ள படைகளான மும்மலங்களும் ஒடுங்கி நீங்கிவிடும். நன்மையை நாடி இறைவனிடம் வேண்டும்போது நான் என்னும் அகங்காரம், ஆசை, பாசம் போன்றவை அழிக்கப்படுவதால் பாம்பினைக் கொண்ட பரமனும், பாயலாகக் கொண்ட பரந்தாமனும் துன்பப் படைகளை ஒடுங்கச் செய்து இன்ப பிடிப்பை ஏற்படுத்துவது என்ற பொருளில் பாங்குடன் தோன்றிய தாம் பழமொழி "பாம்பைக் கண்டால் படையும் ஒடுங்கும்"

தீய படைகள் நம்மை அணுகா வண்ணம் ஒடுங்கச் செய்யும் இறைவனை வணங்கி இதயத்தில் இருத்தி வீடு பேறு அடைய முயற்சி மேற்கொள்வதே நம் கடமையாகும்.

## பிள்ளையார் பிடிக்க குரங்காய் முடிந்தது

எந்த ஒரு செயலைச் செய்ய முனைந்து, அந்த செயல் எதிர் பார்த்தபடி நடவாமல் வேறுவிதமாக நடந்து முடிந்தால் எளிதாகச் சொல்லும் வாக்கியம் "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது" என்பது நல்ல முறையில் செய்ய நினைத்தது வேறு விதமாக முடிந்துவிட்டது என்று விரக்தியுடன் கூறி இப்பழமொழியைக் கூறுவது எளிதாகி விட்டது. காரணம் என்ன? உண்மைப் பொருள் உணராத நிலை தானே.

எந்த ஒரு செயல் செய்வதாயினும் விநாயகர் வழிபாடு இன்றி செய்யப் படுவது இந்து தர்மத்தில் இல்லவே இல்லை. வைணவர்களும் தும்பிக்கை ஆழ்வார் என்று துதிப்பதை காண்கிறோம். விக்னமின்றி வெற்றிதரும் தெய்வம். எல்லோரும் எப்போதும் வணங்க ஏதுவாக குளக்கரை, ஆற்றங்கரை, அரசமரத்தடியில் அமர்ந்து அருள் பாலிக்கும் தெய்வம். அந்த தெய்வத்தை வழிபட்டு எந்தச் செயலும் செய்து முடிவில் ஆஞ்சனேய உற்சவம் நடத்தி பூர்த்தி செய்வது மரபு.

இருதெய்வமும் பிரம்மச்சாரிகள். இருவரிடமும் கலிநெருங்குவதில்லை. இருவரையும் வழிபடுவர்களிடம் கலியின் செயல் வேகமிராது. இருவரும் ஞான தீபங்கள். வல்லமைக்கு வழி காட்டி, நல்லவை நாட்டும் தன்மை மிகக் கொண்டவர்கள்.

எனவே மங்களகரமாக ஒரு செயல் செய்யப்புகும்போது முதன்முதலாக பிள்ளையார் வழிபாடு செய்து தொடங்கப்பெறுகிறது. நிறைவு செய்யும் போது ஆஞ்சனேயர் உற்சவம் ஆனந்தமாக அமைக்கப்படுகிறது. இம்முறையில் செய்யும் செயல்பாட்டால் மாண்பு நிறைந்து இன்பம் நிலையாகிறது என்பதைக் காட்டுவதற்காகவே "பிள்ளையார் பிடித்து குரங்கில் முடித்து" என்ற பழமொழி வழங்கலாயிற்று.

நாமும் விநாயகரில் தொடங்கி அனுமனில் நிறைவு செய்த போதிலும், இன்னும் எத்தனையோ பழமொழிகள் பொருள் மாறி, பழமொழியின் உண்மை உணராமல் வழக்கில் இருந்து வருவது கண்டு அவற்றின் உண்மைப் பொருள் உணர்ந்து இறையருள் பெற்று இன்பம் பெற முயல்வோம்.



# திருமாலின் திருவழகு

'பரியும் நீரரங்கந் தன்னுள் பாம்பணைப்பள்ளி கொண்ட'(திருமாலை 20) என்று தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கத்திலே அனந்தன் மீது சாய்ந்து கிடக்கும் கிடக்கையழகையனுபவிக்கிறார்.

மேன்மைக்கு முன்னே எளிமைக் குணங்கள் பகல் விளக்குப் போல் பிரகாசிக்க குணக்கடல் ஆதிப்பிரான் வைகுந்தத்தில் திருவோலக்கமிருக்கிறான். நித்திய சூரிகளோ இம்மேன்மை மிக்கவனை இமை கொட்டாது கண்டு களித்திடுகிறார்கள். அஞ்ஞானத்திலே கிடந்துழலும் உலகோர் இவ்வானந்தம் அடைய வாய்ப்பிருந்தும் அதனையிழந்து சம்சாரத்தில் உழலுகிறார்களே என்னும் குறை அவன் உள்ளத்தே தோன்றுகிறது. அவர்களையும் தம்பால் ஈர்த்திடுவோமென்று இராமனாய்க் கிருஷ்ணனாய் இப்புவியில் தோன்றினான். ஆயினும் அவ்வக் காலங்களிலே வாழ்ந்தோர்கள் மட்டுமே கண்டானந்தித்துப் போனார்கள். இக்குறை தீர எல்லாக்காலத்திலும் எல்லோர்க்கும் எளிதாய் வந்து ஆச்ரயிக்கலாம்படியாய் அர்ச்சையாய்த் தோன்றுகிறான் இப்புவியில். "வானவர் வானவர் கோனோடும்" என்றவாறு இதுகாறும் பரம்பொருளாகிய தன் மேன்மையிலேயே திளைத்துக் கிடந்த நித்யசூரிகளும் பிரும்மாதி தேவர்களும் தன் எளிமைக் குணங்களில் ஈடுபட்டு வணங்கிடுமாறு மேலேயிருந்து கீழேயிறங்குபவன் தன்பொன்னடியை வைத்துத் திருமலையிலே நிற்கிறான்.

சிகரத்தே நின்றிருந்தால் நாட்டார் தன்னை எளிதாய்க் கிட்டிவர முடியாதேயென்று சற்றுத் தெற்கே நடந்து திருவரங்கத்திலே பள்ளி கொண்டு கிடக்கிறான். உடன்வந்த அனந்தனாகிய படுக்கையிலேசாய்ந்து கிடக்கிறான். அவன் இவன் மேல் சாய்ந்தாலல்லது படுக்கையான இவனுக்கு இன்பம் கிட்டாதே. "ஓம்" என்னும் பிரணவச்சொல்லுக்குரிய ஆதிப்பொருள் தானேயென்று காட்டித்தரும் வண்ணம் பிரணவாகார விமானத்தின் கீழே சாய்ந்தான். ஜலத்தைப் படைத்ததும் தானேயென்றும் பெருமிதத்தோடு பாற்கடலிலே கிடப்பவன், 'ஆபத்து காப்பாற்று' என்னும் "கூப்பீடு" எப்பொழுது காதில் விழும் உடன் எழுந்துசெல்ல, என்று எதிர்நோக்கிக் கிடப்பன். இரண்டாற்றுக்கும் நடுவே கிடக்கும் இவன், 'சேதனர்களே! உங்கள் சுமையை என் தலையிலே வைத்தாலல்லது எழுந்திரேன்' என்று கிடக்கிறான். உலகமளந்த காலை பிரும்மனின் கமண்டலத் தீர்த்தம் இவன் திருவடி சம்மந்தத்தால் கங்கையாய்த் தோன்றி புனிதமடைந்தாள். காவிரியோ திருவடி பிடித்து வீடுவாரைப் போலே திருவடி பற்றி ஆனந்தப் பெருக்கால் பொங்கிப் பாய்ந்தோடுகிறாள். சாய்ந்து கிடக்கும் நிலையிலும் இவனழகோ விஞ்சியே நிற்கிறது. நித்திய சூரிகளையும், பிரும்மாதி தேவர்களையும், ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஆகியோரனைவரையும் இங்கு தவம் கிடக்கும்படி செய்தது இவ்வழகன்றோ! இத்தனை பெருமைகளால் திருவரங்கம், "பூலோக வைகுந்தம்" எனப் போற்றப் பெறுகிறது.

ஆதித்தனும் எழுந்து தன்னொளி பரப்பும் காலை காவேரிக்கரையிலே ஓர் நெடிய உருவம் தோளிலே தொங்கும் வீணையைமீட்டிப் பெரிய பெருமாளை (அரங்கன்) கருத்திலே கண்டு இனிய கானமெழுப்பி அதிலே மெய்மறந்து நிற்கிறது. "பாணர்" என்னும் குலத்திலே தோன்றியவன் என்னும் தன் கருத்துக்கிசைய


திரு. வி. ராகவன்

பள்ளத்தூர்.


அவன் கிடக்கும் தலத்தைத் தன் கால்களாலும் தீண்டத்தகாது என்று இங்கு நின்றும் மனக்கண்ணே கண்டு களித்திடுகிறது. அவர்தான் "பாண் பெருமாள்" எனப் பெருமையுடன் போற்றப்பெறும் திருப்பாணாழ்வார் என்பவர் ஆவார். கரையருகே நிற்கும் இவரைக் கண்டு திருமஞ்சன தீர்த்தமெடுக்க வந்த சாரங்கமுனி என்பார் "தூரப்போ" என விரட்டுகிறார். தன்னை மறந்து பரவச நிலையில் இருக்கும் இவர் காதில் அது விழாதிருக்க, தன்னை அலட்சியம் செய்வதாக முனிவர் நினைத்து சிறு கல்லொன்றையெடுத்து இவர் மீது எறிய நெற்றியில் இரத்தக் காயம் ஏற்பட்டது இவருக்கு. எளியாரும் தன் திருவடி பற்றலாம்படி எளியனாய் இங்கே கிடப்பவன் தன்னடியார்க்கு நேர்ந்த நோவினைக் காண சகிப்பனோ? "பாகவதோத்தமரிடம் அபசாரப்பட்டு விட்டோமே"யென வருந்தி பாணரும் அப்பால் சென்றார்.

"என்னரங்கத்தின்ன முதல், குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழு கமலப் பூவழகர் எம்மானார்" (நாச். திரு. 11-2) என ஈடுபடும்படியான அவனது முகத்தில்

விசனக்குறி கண்டு காரணமறியாது முனிவரும் வருத்தத்துடன் உறங்கச் சென்றார். கனவிலே "நம் அந்தரங்கரான பாண் பெருமாளைத் தாழ்வாக நினையாதீர். உம்தோளிலே அவரைச் சுமந்து நம்மிடம் இட்டு வாரும்" என்னும் அரங்கனின் நியமனத்தைச் சிரமேற்கொண்டு அவரை அழைத்து வந்தார். இங்கு போக்யமான வ்யாக்யான சூக்தி கேளீர்: "தம்மை வஹித்தவளவில் தாம்சேஷபூதரானபடி என்னென்னில்: திருத்துழாய் திருவபிஷேகத்தில் இருந்த தென்னா, சேஷத்வம் குலையாதே"

செல்வர் வீட்டுக் குழந்தைகளை உயர்ந்த ஆசனத்திலிருத்தித் தான் கீழிருந்து பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசானைப்போல் தன்னுந்தித் தாமரையில்தோன்றிய பிரமனுக்குத் தான் கீழே கிடந்து வேதத்தை ஓதுவித்தான். அவன் தானே இன்று மின்னொளி பரப்பி ஓங்கி நிற்கும் பிரணவாகார விமானத்தைக் காட்டி 'ஓம்' என்னும் சொல்லிலே புணர்ந்து கிடக்கும் 'அ', 'உ', 'ம' என்னும் மூன்றெழுத்துக்களையும் மேலும் 'அ' என்னும் எழுத்துக்குரிய ஆதிப்பொருளும் தானே என்பதனையும் இவர் கருத்திலே புகுத்தினான். 'உலகப்பொதுமறை' எனப்போற்றப் பெறும் திருக்குறளும் "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றேயுலகு" என்று இதனையே பறைசாற்றுகிறது. திருவில்லிப்புத்தூரிலே அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் வடபத்ரசாயிப்பெருமானுக்குத் தொண்டு புரிந்து வந்த பெரியாழ்வாரை அவதாரங்களிலே ஈடுபடும்படி அவனே தள்ளினான். இங்கு திருவரங்கனோ பாணரைத் தன்னுள் இழுத்துக் கொண்டான். அபிமானியான பிரமனோ அவனை திருமுடி தொடக்கமாயனுபவித்தான். அடியாராகிய இவரோ திருவடி தொட்டு திருமுடி ஈறாக அவன் காட்டக் கண்டு உள்ளம் குளிர்ந்தார் என்றும் வாடா மலராம் "அமலனாதிப் பிரான்" என்னும் பாமாலையைச் சூட்டுகிறார்.

பக்கத்தே உறங்கும் சிசுவைத் தாய் அணைத்துக் கிடப்பது போல் அஞ்ஞானவிருளிலே மூழ்கிக் கிடக்கும் மாந்தரின் சிரசிலேயும் உய்விக்கவல்ல தன் திருவடிகளை அன்று வைத்தவனின் திருவடிகளிலே இவர் மனமும் கண்களும் லயித்தன. பார்ப்போர் கண்களைத் தன்பால் இழுத்துக் கொள்ளும் வசீகரத் திருமேனியுடையவன் என்பதாலேயோ சக்கரவர்த்தி திருமகனுக்கு இராமன் என்று வசிட்ட மாமுனிவர் பெயரிட்டார். இவனழகைப் பருகவேண்டுமென ஆசைப்பட்டோர் "தோள்கண்டார் தோளே கண்டார்" எனத் தோளைக் கண்டவர்மறற அவயவங்களைக்காண முடியாதவாறு தோளிலே இவர்கள் பார்வை நிலைத்துவிட்டாற் போல் இவருடைய பார்வையும் திருவடியிலேயே நிலைகுத்தி நின்றுவிட்டது. இங்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரின் அருமையான உரை காணுவோம். என் சிந்தனை — திருவடிகளின் சுவடறிந்து பின்பு பிறம்பு போக மாட்டாத நெஞ்சு தீர்த்த மாடா நிற்கத் துறையில்லே பிள்ளையைக் கெடுத்துத் திருவோலக்கத்திலே காண்பாரைப் போலே, திருவடிகளில் நின்றும் திரு பீதாம்பரத்தில் தன் நெஞ்சை கண்டபடி. மனஸ்ஸு என்னாதே "சிந்தனை" என்றது சிந்தா விசேஷத்தைப்பற்ற". மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும் வாய், கை, கால், குதம், குறி ஆகிய கர்மேந்திரியங்களும் மனசு என்னும் பதினொன்றாவது இந்திரியத்தின் கட்டுப்பாட்டிலே செயல்படுபவன. இங்கு மனத்தின்செயல்பாட்டு நிலையான சிந்தனை அவன் ஆடையின் மீது சென்றது.

"காவலில் புலனை வைத்து (திருமாலை!) எனக் கட்டுக்கடங்காது பட்டி மேய்ந்திடும் புலன்களனைத்தையும் அவனருளாலே கட்டுக்குள் கொண்டுவந்த தொண்டரடிப் பொடியாழ்வாரின் அனுபவம்

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை
இலங்கை நோக்கி
கடல் நிறக்கடவுளெந்தை
அரவணைத் துயிலுமா கண்டு
உடலெனக்கு உருகுமாலோ!
எனசெய்கேன்? உலகத்தீரே!

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண், செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

(திருமாலை 19) என அவன் கிடக்கையழகிலே கட்டுண்டு கிடக்கும் அவர் பாறை போன்ற நெஞ்சும் உருகி ஆனந்தத்திற்குப் போக்கு வீடாகக் கண்ண நீராகப் பெருக்கெடுத்து, தொடர்ந்து அவனழகைக் கண்டுகளிக்க முடியாதவாறு செய்தது.

“கனியிருந்தனைய செவ்வாய்க்
கண்ணனைக்கண்ட கண்கள்
பனியரும்பு உதிருமாலோ!
என் செய்கேன் பாவியேனே?”

(‘திருமாலை 18) என்றவாறு ஆனந்தமே இவர் கண்களில் பனி நீராய்ப் படர்ந்து சுவர் வைத்தது போல் செந்தாமரைக் கண்ணனைக் கண்டு கொண்டேயிருக்கவிடாது மறைத்து விட்டதே!

“திருவேங்கடத்து எழில் கொள் சோதி”

(திருவாய் 3-3-1)

என்றவாறு ‘வானோர் சோதி’ (ஆதியஞ் சோதி) பகல் விளக்குப் பட்டிருக்கும்; ‘நீலாழிச் சோதி’ (பாற்கடல் பள்ளிகொள்வான) கடல் கொண்டு கிடக்கும்; வேங்கடத்து எழில்கொள் சோதி குன்றின் மேல் இட்ட விளக்காய் இருக்கும். உள்ளிருக்கும் வாத்சல்யமெல்லாம் கண்களிலே தோற்ற அண்டினவரை அன்புடன் அணைத்திடத் திருமலையிலே நிற்கிறான். குரங்குகளோடு நித்திய சூரிகளோடு வாசியற முகம் கொடுத்துக் கொண்டு நிற்கிறான். “மந்திபாய் வடவேங்கடமாமலை” என்று இவ்வாழ்வாரே அருளிச்செய்யும் வண்ணம் குரங்குகளும் தன்னிச்சையாய் மரத்திற்கு மரம், கிளைக்குக் கிளை பழத்திற்குப் பழம் என்றவாறு தாவித்திரிந்து சந்தோஷமாயிருக்கின்றன. பாணரோ தன் புலன்கள் ஒத்துழைக்காததை நினைக்கிறார். “இருடீகேசன்” எனச் சிறப்பித்து அழைக்கப்படுபவன் தானே இங்கு நிற்பது. இந்திரியங்களையெல்லாம் நியமிப்பவன் என்பதால் தானே இச்சிறப்புப் பெயா ஏற்பட்டது. வானிலிருந்து இறங்கியவன் “விரையார் பொழில் வேங்கடவன்” எனத் திருமலையிலே நிற்கிறான். ஆகவே அவர் வேங்கடவனை நினைக்கிறார். இதன் பின்னரே அரங்கன் இடையை அலங்கரிக்கும் அந்தி போல் நிறத்தாடையையும் நான்முகனைப் படைத்த உந்தித் தாமரையையும் கண்டானந்திக்கிறார்.

செய்த தீம்புகளாலே சினமுற்ற தாய் யசோதை தாம்பாலே உதரத்திலே கட்டியதால் ஏற்பட்ட தழும்பையும் காண்கிறார். உலகனைத்தையும் தன் கட்டுக்குள் செயல்படச் செய்பவன் இன்று ஓர் அபலையின் கட்டுக்குள் சிக்கிக்கிடப்பது அவனது எளிமையைக் காட்டுவதேயாயினும் பிறர் ஏச்சுக்கு இடமாகிறதேயென அதனை மறைத்திட அரங்கனுக்கு இன்றும் இடையில் “கணயம்” என்னும் ஆபரணம் சாத்தப்படுகிறது. பிரளயத்திலே அழியவிருந்த உலகு தனைக் காப்பாற்ற (கேளாதவளவிலும்) சிறுகுழந்தையாய்த் தோன்றி அதனை விழுங்கி வயிற்றிலே வைத்திருந்து ஆபத்து நீங்கியதும் வெளிவிட்ட கண்டத்தையும் காண்கிறார். அடியார்கள் கரம்பட்டது என்பதால் எப்பொருளையும் ஏற்றுக் கொள்பவன் தாய் கரம்பட்டது என்பதாலேயே வெண்ணெயைக் களவு கண்டேனும் உண்பவன்தானே அரங்கனாய் இங்கே கிடப்பது. இன்றும் இவன் கொறுட்டை (முகவாய்க்கட்டை) முகர்ந்து பார்த்தால் வெண்ணெய்முடை நாற்றம் வீசும் என்பர். அத்திருபவளத்தையும் கண்டுகளிக்கிறார்.

கடல் கடைந்தெடுத்த உப்புச் சாறான அமுதத்திற்கும் மேலான நிலையான ஆனந்தத்தையளிக்கவல்ல ஆராவமுதத்தினைக் கண்ட கண்களால் வேறொன்றையும் காண விரும்பவில்லை. “நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக்கமலந்தன்னை அயன்” (முதல் திருவந். 56) என உந்தித் தாமரையில் தோன்றியவனாயினும் தன் தந்தையின் திருவடித்தாமரைப் பற்றி அறிந்தானில்லை. இவ்வாழ்வாரோ பூர்ணனானவனைக் கண்ட பின்னர் குறைகளுள்ள மற்றப் பொருள்களைக் காணத்தான் விரும்புவரோ? அரங்கனோடு ஐக்கியமான பின்பு வேறொரு பொருளை எவ்வாறு காணமுடியும்?



## வைணவன்

உலகில் எல்லோர்க்கும் பணிவு காட்டி, எவரையும் இகழாது இன்சொல் ஊட்டி, உள்ளத்தாலும், உடலாலும் கவலையற்றிருப்பவனே வைணவன்.

பொய்யுரை, கயமை ஆகியவற்றினின்றும் விலகி, பற்று, இன்பம் விருப்பம் முதலியவற்றை அடக்கி ஆள்பவனே வைணவன்.

நல்ல வைணவனின் உடல் புண்ணியத்தலம். அவனை ஒரு முறை கண்டால், 71 தலைமுறை கடைத்தேறும்.

சிறந்த இத்தகைய வைணவனைப் பெற்ற தாயை 100 முறை வணங்குவேன்.

—மகாத்மா காந்தி

அனுப்பியவர்: கமலவேணி தனபதி

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கொடுக்கும்" என்று கூவிக்கொண்டு ஓடினார். ஆம் நாமதேவர் எதிலும் எங்கும் பரமனைக் காணும் (உள்ளத் தொடுவினை உள்ளுருசோதியை, உள்ளம் விட்டோரடி நீங்கா ஒருவனை—திருமந்திரம்) பக்குவத்தை அடைந்துவிட்டார்.

நாமதேவர் ஞானேஸ்வரர் மற்றும் பல பக்தகோடிகளுடன் வடநாடு யாத்திரை சென்றார். ராஜஸ்தான் பாலைவனத்தில் தண்ணீருக்காகத் தடுமாறும்போது, ஞானேஸ்வரர் தம் யோகவலிமையால் கிணற்றுக்குள் சென்று தண்ணீரை வெளிக்கொணர்ந்தார். நாமதேவர் பாண்டுரங்கனின் பக்தியின் சக்தியால் அதே கிணற்றில் தண்ணீர் பொங்கி விழச்செய்தார்.

நாமதேவரின் வீட்டிற்கு அப்பால் ஒரு பிராமண சிரேஷ்டர் வாழ்ந்து வந்தார். அவர் பாண்டுரங்கனின் பத்தினி "ரகுமாயின்" அனுக்கிரகத்தால் கிடைத்த அரிய "ஸ்பரிசக்கல்" ஒன்று வைத்திருந்தார். அது இரும்பை தொட்டால் தங்கமாக்கும் குணம் உடையது. பக்தர்களுக்கும், கவிஞர்களுக்கும் சோதனையும், பட்டினியும் உடன் பிறந்தவர்கள். இது தான் சத்திய சோதனை. தங்கத்தை உருக்கி உருக்கி ஓங்கியடித்துத்தான் நகையாக மாற்ற முடியும். இது போன்றுபக்தர்களைப்படுத்திஎடுத்து பரமபதம் அளிக்கிறான் பகவான். இதற்கு நாமதேவரும் விதிவிலக்கல்ல! பட்டினியால் வாடிய நாமதேவரின் பத்தினியும் ஸ்பரிசக்கல் வைத்திருந்த அந்த பிராமணரின் மனைவியும் உத்தம தோழிகள். பசி வந்திடப் பத்தும் (5 ஞானேந்திரியங்கள், 5 கர்மேந்திரியங்கள்) பறந்துவிடுமே! குழந்தைகளின் பசிப்பிணியைப் போக்கும் பொருட்டு நாமதேவரின் பத்தினி அப்பிராமண பத்தினியிடமிருந்து அவ்ஸ்பரிசமணியை இரககியமாக வாங்கி வந்து ஒரு பாத்திரத்தைத் தங்கமாக்கிப் பின் அதை விற்றுக் குழந்தைகளுக்கு வயிரார உணவு படைத்தாள். விபரத்தையறிந்த நாமதேவர்சோபத்தில்அவ்ஸ்பரிசமணியை எடுத்து ஆற்றில் எறிந்துவிட்டார்.

செய்தி ஊர் முழுவதும் பரவியது. ஸ்பரிசமணியை இழந்த பிராமணர் நாமதேவரைப் பழித்தார். அவர் அக்கல்லை ஆற்றில் எறியவில்லை. மாறாக ஒளித்து வைத்திருக்கும் திருடன் எனக் குற்றம் சாட்டினார். இதைப் பொறுக்காத நாமதேவர் ஆற்றில் குதித்து பல கற்களை அள்ளி கரையில் எறிந்து 'உன் கல்லைக் கண்டு எடுத்துக்கொள்' என்றார். என்னே அதிசயம்! அவர் விட்டெறிந்த அத்தனைக் கற்களுக்கும் இரும்பைத் தங்கமாக்கும் தன்மை இருந்தது. பிராமணர் உண்மையை உள்ளபடி உணர்ந்தார். நாமதேவர் மாற்றுக்குறையாத பத்தரைமாற்றுத் தங்கம் எனக் கண்டார். அவர் காலில் வீழ்ந்து அவர் பக்தரானார். எல்லாம் துறந்தார். நாமதேவரின் அன்பை பெற்றார். தன் அகந்தையை வென்றார். யான் எனது என்ற மமகாரத்தை அழித்தார்.

"......உள்ளெலாம் உருகிக் குரல்
தழுத்தொழுந்தேன்,
உடம்பெலாம் கண்ணீர்சோர நள்
ளிருள் அளவும் பகலும்
நானழைப்பன் நாராயணா என்னும்
நாமம்"

என்ற திருமங்கையாழ்வார் வாக்குப்படி நாமதேவர் அல்லும் பகலும் பண்டரிநாதனை ஆராதித்து வந்தார்.

நாமதேவர் இந்தி மொழியிலும் அபங்கள் பாடியுள்ளார். அவற்றில் 80 பாடல்கள் சீக்கியர்களின் வேதமான "குருக்ரந்த் சாகிப்"பில் இடம் பெற்றுள்ளன. பஞ்சாப்பில் கோசியாப்பூரில் நாமதேவருக்கு ஒரு கோயில் உள்ளது. இவரின் ஆயிரக் கணக்கான அபங்கள் அன்றும் இன்றும் என்றும் மக்களைக் கவர்ந்திழுக்கும் சக்தி வாய்ந்தன.

இட்டத்தட்டத் தமது 50 வது வயதில் நாமதேவர் சமாதியாகி பண்டரிநாதனின் வாயிற்படியின் கீழ் நித்ய வாசம் செய்கிறார். எல்லா பக்தர்களின் பாததூளியும் தன்மேல் படவேணும் என்பது அவரது இறுதி விருப்பம். பகவானைவிட பக்தனுக்கு மதிப்பும், மரியாதையும் அதிகம் என்பது இதனால் உணரலாம். பக்தர்களின் மனம், அவர் என்னாட்டவராய் இருந்தாலும், ஒன்றுபோல்தான் செயல்படும் என்பதற்கு குலசேகராழ்வாரின் கீழ்க்கண்ட பாடல் நமக்கு அறிவுறுத்துகிறது.

"செடியாய வல்வினைகள் தீர்க்கும்
திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்
கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பை
யரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன பவளவாய்
காண்பேனே!

இப்பக்த சிகாமணிகள் காட்டிய பாதையில் சென்று பரமனின் பரிபூரண அனுக்கிரகத்தை அடைய அனுதினமும் முயற்சிப்போமாக! ★

# மகளிரும் கோலமும்

திரு. ஏ. என். சுப்ரமணியன்,
குடியாத்தம்.

ஏந்த ஒரு சுபகாரியத்தையும் நாம் கோலம் போட்டுத்தான் ஆரம்பிக்க வேண்டும். கோலம் மங்களத்தைக் குறிக்கிறது. ஒருவர் வீட்டிற்குச்செல்லும்போது நம் பார்வையில் முதலில் படுவது மகளிர் வரைந்த வண்ணக் கோலம்தான். ஒரு பெண்ணின் ரசனையையும், வரையும் கோலங்களால் கைத்திறனையும், மனப்பான்மையும் ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். அழகான தோற்றத்தைத் தோற்றுவிப்பதாலேயே கோலம் என்ற பெயர் இதற்குப் பொருந்தும்.

கோலம் எந்தப் பள்ளியிலும் கற்றுக் கொடுப்பதில்லை. ஆயினும் வழி வழியாய் தொடர்ந்து வரும் பெருமை வாய்ந்த பழங்கலை இது. கோலமும் ஒரு வகைச் சித்திரம் ஆகும். தென்னிந்தியாவில் இக்கலை சிறப்புற்று விளங்குகிறது.

தாய்மார்கள் பெண் குழந்தைகளுக்குச் சிறு வயதிலிருந்தே கோலம் போடுவதைப் பழக்கி விடுவார்கள். 'சித்திரம் கைப்பழக்கம் செந்தமிழ் நாப்பழக்கம்' என்பது போல் நாளடைவில் குழந்தைகளுக்குக் கோலம் போடுவது பழகிவிடும்.

காலை சூரியன் உதிப்பதற்கு முன் எழுந்து அதாவது 'உஷத்' காலம் எனப்படும் இருள் பிரியுமுன் உள்ள நேரத்தில், புதிய பசுஞ்சாணத்தை எடுத்து, புதிய ஜலத்தில் கரைத்து வாசலில் மண் தரையில் தெளித்துப் பெருக்கி அரிசி மாவினால் கோலம் போடவேண்டும். பொலபொலவென பொழுது விடியும் தறுவாயில் வெள்ளை வெளேரென்று மல்லிகைப் பூக்கள் சிதறினதுபோல் வரையப்பட்ட கோலத்தைக் காணும் போது அது கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ண ஓவியமாய்த் திகழும்.

கோலம் போட ஜாதி மத வித்தியாசம், ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் கிடையாது. கிராமங்களில் விசாலமாக பரந்து இருக்கும் முன் வாசலில் புதிய சாணம் போட்டு மெழுகிச் சுத்தமாக வைத்திருப்பார்கள். அங்கேதான் நெல், துவரை முதலிய தானியங்களை உலர்த்தி எடுப்பது, வற்றல் வடகம் போடுவது எல்லாம் நடைபெறும். குழந்தைகள் விளையாடுவது, பெரியவர்கள் கோடையில் படுப்பது, நிலாவில் உட்கார்ந்து எல்லோரும் சாப்பிடுவது எல்லாம் அந்த இடத்தில்தான். இரவில் பல்லி, பூரான் முதலிய விஷ ஜந்துக்கள் சஞ்சரிக்கும் நேரத்தில் அசுத்தங்கள் முதலியவை அங்கு தங்கி இருக்கலாம். அதனால்தான் அவைகளை நீக்கிச் சுத்தம் செய்ய புதிய பசுஞ் சாணத்தினால் சுத்தம் செய்கிறார்கள். மெழுகிய இடம் வெறுமையாக இல்லாமல் இருக்கத்தான் அவரவர்களுக்குத் தெரிந்த மாதிரி பெரியதாகவோ, சிறியதாகவோ கோலம் போடுவார்கள்.

புதிய சாணத்தில் பினாயில் (Phenyil) போலவே சுத்தம் செய்யும் தன்மை இருப்பதாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். நல்ல பசும்புல் மேய்கின்ற பசுவின் சாணத்திற்குப் பண்டங்களைச் சுத்தம் செய்யக் கூடிய தன்மை இருப்பதாக மேல்நாட்டில் இன்று கண்டு பிடித்திருப்பதை நமது முன்னோர்கள் வெகு காலத்திற்கு முன்பே தெரிந்து கொண்டிருக்கிறார்கள். புதிய சாணத்திலிருந்து வியாதிக்கிருமிகளைக் கொல்லும் மருந்து கூடத் தயாரிக்கிறார்கள்.

அரிசி மாவினால்தான் கோலம் போடுவது மிகவும் சிறந்தது. ஏனெனில் கோலத்தில் உள்ள மாவு எறும்பு போன்ற சிறிய ஜந்துக்களுக்கு உணவாகிவிடும். நம்மை அறியாமல் கோலம் போடுவதின் மூலமாக சிறிய உயிர்களுக்கு உணவளித்த திருப்தியையும் புண்ணியத்தையும் அடைகிறோம். சிலர் மொக்கு மாவு என்று காரைப்பொடியோ, சுண்ணாம்புப் பொடிதான் கோலத்திற்கு உபயோகப்படுத்துகிறார்கள். இதனால் மற்ற ஜீவ ஜந்துக்களுக்கு உணவாக இவை ஆகாது.

சுத்தமாகவும் அழகாகவும் உள்ள இடத்தில் இலக்ஷ்மி வாசம் செய்வாளென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

கோலத்தில் எவ்வளவோ விதங்கள் உண்டு. புள்ளி வைத்துப் போடுவது, கோடு போட்டுப் போடுவது, குழாயில் போடுவது, அச்சில் போடுவது, மாவைக் கரைத்து இழைக் கோலம் போடுவது, வண்ணப்பொடி தூவிப் போடுவது எனப் பலவிதங்கள் ஆகும்.

சாதாரண நாளில் சிறிய கோலமாய்ப்போடுவார்கள். பெரியசமசதுர கோலம் போட்டு, செம்மண் வரம்பு கட்டி இருந்தால் ஏதோ விசேஷம் அல்லது பண்டிகை நாள் என்று தெரிந்து கொள்ளலாம். பெரிய இழைக் கோலம் போட்டு காவி இட்டிருந்தால் கல்யாணம் அல்லது பிறந்த நாள் என்று அறியலாம். திடீரென்று நினைத்தபோது கோலம் போட்டால், அந்த வீட்டில் குழந்தை பிறந்திருக்கிறது அல்லது வீட்டுப் பெண் வயதுக்கு வந்திருக்கிறாள் என அறியலாம்.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்க டேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்ப தைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

தினமும் ஒவ்வொரு விதமாய்க கோலம்போட்டு அதில்பரங்கிப்பூ அல் லது பூசணிப்பூவை வைத்திருந்தால் அக்காலம் மாதங்களில் சிறந்த மார் கழி மாதம் ஆகும். கோலம் போட்டு பலவித பூக்கள் வண்ணம் வணணமாக கலர் பரப்பி இருந்தால் ஆவணி மாதத்தில் வரும் ஓணம் பண்டிகை யாகும். இது கேரளாவில் வழக்கம்.

சூரியன், சந்திரன், தேர் மாதிரி கோலம் போட்டிருந்தால் பொங்கல் பண்டிகை அல்லது ரதசப்தமி என்று அறியலாம். இந்தியா மாதிரியும், கொடி மாதிரியும் கோலம் போட்டி ருந்தால் சுதந்திர தினம் அல்லது குடியரசு நாள் என்று அறியலாம். கோயில் திருவிழாக் காலத்தில் அன் றிரவு சுவாமி என்ன வாகனத்தில் வருவாரோ அதைப் போலவே புள்ளி வைத்து கோலத்தில் சித்தரிப்பார் கள். பார்க்கப் பிரமாதமாகக் காட்சி யளிக்கும்.

சைவப் பிராமணர்கள் சமச் சதுரமா யும் வைஷ்ணவர்கள் நடுவளைந்த சதுரமாகவும், மற்றவர்கள் வெவ் வேறுவித சதுரமாயும் விசேஷ நாட் களில் போடுவார்கள். கோலம் போட்டிருக்கும் விதத்தில் அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று கண்டுபிடிக்கலாம்.

கோலமே போடாமலிருந்தால் அந்த வீட்டில் ஏதோ துக்க சம்பவம் நடந்திருக்கும் என்றும் அல்லது அவர் கள் மறைந்த திதி என்றும் அறிய லாம். அரிசியில் போடும் வகை வகையான கோலத்திலிருந்தே வாழ் வின் இன்ப துன்பங்களைக் கண்டு பிடிக்கலாம்.

கோயிலிலும், தெய்வ சன்னதி யிலும் போடும் கோலங்களிலும் பல விதங்கள் உண்டு. ஒவ்வொரு கிழ மைக்கும், ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு கோலம் உண்டு. சித்ரா பௌர்ணமி என்றால் சமசதுரமாய் கோலம் போட்டு ஒரு பக்கம் (தெற்கே) வழிவிட்டிருக்க வேண்டும். நாக பஞ்சமி என்றால் பாம்புக் கோலங்களை விதவிதமாய்ப் போடு வார்கள். வரலக்ஷ்மி விரதம் என் றால் சுவற்றில் காவிக்கட்டியால் சுவஸ்திகா மண்டபம் எழுதி, அதன் நடுவே லக்ஷ்மி முகம் வரைந்து, கீழே கச்சபத்மம், இதய கமலம் என்று கோலங்களைப் போடுவார்கள்.

தேவி பூஜை என்றால் 'ஸ்ரீசக்கரம், 'ஓம்' என்ற கோலஙகளைப் போடு வார்கள். சிலர் அஷ்டலக்ஷ்மி கோலம் போடுவார்கள். துளசிபூஜை என்றால் துளசி மாடம் மாதிரி கோலம் போட் டுப் பூஜை செய்வார்கள். முருக னுக்கு பூஜை என்றால் வேல், மயில் போடுவார்கள். கோகுலாஷ்டமி அன்று (கிருஷ்ணர் பிறந்த நாள்) குழந்தையின் பாதம் போல் வீடு முழு வதும் போடுவார்கள். கார்த்திகைப் பண்டிகை என்றால் அகல் விளக்கு மாதிரியும் குத்து விளக்கு மாதிரியும் போடுவதுண்டு. மாரியம் மனுக்குப் பூஜை செய்வதானால் 'அபய அஸ்தம்' போடுவார்கள்.

தேய்த்த பித்தளை தாம்பாளத் தில், கோந்தினால் கோலம் வரைந்து அதில் சந்தனம், மஞ்சள் பொடி, அரிசி மாவு, இவைகளை சிறு சிறு மணி போல உருட்டி (ஜலம் விட்டு பிசைந்து) ஒட்ட வைத்து நடுவில் வர்ணபொடியை தூவலாம். அது போல சூடவில்லையோ (கற்பூரம்) முத்துக்களையோ ஒட்ட வைக்கலாம். அரிசி மாவில் கலர் பொடியைக் கலந்து மணிமணியாய் தாம்பாளத் தில் பரப்பி வைக்கலாம். தானியங் களையும், ஜவ்வரிசியையும் வர்ணப் பொடியில் பிசிறிக் கொண்டு தாம்பா ளத்தில் தேவையான சித்திரம் போலப் பரப்பி வைக்கலாம்.

சிலர் விசேஷ தினங்களில் வாசற் படி, துளசிமாடம் முதலியவைகளுக்கு மஞ்சளினாலும் குங்குமத்தினாலும் மாற்றி மாற்றிப் பொட்டு வைப் பார்கள். மாவினாலும் சுண்ணாம் பினாலும் கொடி மாதிரி வரைந்து மஞ்சளினாலும், குங்குமத்தினாலும் பூ மாதிரிப் போடுவார்கள். நீர்மேல் கோலம், நீருக்குள் கோலம், பூக் கோலம், இசைக்கோலம், பெயிண்ட் மூலம் கோலம், (இது திருவண்ணா மலை கோயில் உள்ளே போடப்பட் டிருக்கிறது.) என்று கோலங்களில் பலவகை உண்டு. மகளிர் கைவண்ணத்தில் கோலங்கள் மிளிர் கின்றன. அதனால் இந்நாட்டின் பண்பாடு ஒளிர் விடுகின்றது.



(12-ம் பக்கத் தொடர்ச்சி)

பாலகனாய் ஆலிலைமேல் பைய உலகெல்லாம் மேலொரு நாள் உண்ட சிறப்பும், மந்தரத்தால் மாநீர்க்கடல் கடைந்து வானமுதம் அந்தரத்தார்க்கு ஈந்த கருணையும் மூன்றாந்திருவந்தாதியின் 33ம் பாடலில் சுட்டப்பட்டுள்ளன. 'மேவி அரியுருவமாகி இரணியன தாகம் தெரியுகிரால் கீண்டானின் சினம்' மூன்றாந் திருவந்தாதி 42ம் பாடலில் பேசப் பட்டுள்ளது. 'ஆழ்ந்த மணி நீர்ச் சுனை வளர்ந்த மாமுதலை கொன்ற அணி நீலவண்ணத்தவனை' மூன்றாந் திருவந்தாதி 50ம் பாடல் மறவாது பாடியுள்ளது. 'ஏய்ந்த பணக்கதிர் மேல் வெவ்வுயிர்ப்ப வாய்ந்த மது கைடவரும் வயிறுருக மாண்டார்' என்பதனை மூன்றாந் திருவந்தாதி 66ம் பாடல் தெரிவிக்கின்றது. இராமாவதாரச் செயல்களை மூன்றாந் திருவந்தாதி 52ம்பாடல் குறித்துள்ளது.

எவற்றிற்கும் மேலாக பேயாழ்வாருக்கு குன்றம் குடையாக ஆகாத்த கோவாகிய கண்ணனிடத்திலும், அடியளந்த மாயனாகிய திருவிக்கிரமனிடத்திலும் அளவற்ற ஈடுபாடு உண்டு. இவ்விரண்டு அவதார அற்புதங்களிலும் அடிக்கடி தம் மனம் இலயித்தவராய் மெய்மறந்திருப்பது அவர் வழக்கம். குறும்பு மிளிரும் குழவிக் கண்ணனின்செயல்களையும், அவனேபாரதப் போரில் பகைவரொடுங்க சங்கநாதம் முழங்கியதையும் ஒரு சேர கூறும் மூன்றாந் திருவந்தாதியின் 60-ஆம் பாடலைக் கீழே காணலாம்.

"பெற்றம் பிணைமருதம் பேய்முலை
மாச்சகடம்
முற்றக்காத் தூடுபோ யுண்டுதைத்து—
கற்றுக்
குணிலை விளங்கனிக்குக் கொண்
டெறிந்தான் வெற்றிப்
பணிலம்வாய் வைத்துகந்தான் பண்டு"

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

வாமனனாய் மாவலிபால் மூன்றடி மண் யாசித்து மூவுலகையும் அளந்தவனின் இணையடிக்கே ஆளாகி அஞ்சாதிருக்க அருள் வேண்டுகிறார் ஆழ்வார் :

"வாய்மொழிந்து வாமனனாய்
மாவலிபால் மூவடிமண்
நீயளந்து கொண்ட நெடுமாலே—
தாவியநின்
எஞ்சா இணையடிக்கே ஏழ்பிறப்பும்
ஆளாகி
அஞ்சா திருக்க அருள்"

—மூன்றாந் திருவந்தாதி
18வது பாடல்

நினைப்பரிய பெருஞ்செயல் செய்து முடித்த நிமலன் உலகளந்த அயர்வு நீங்கவே வேளுக்கை என்ற ஊரில் நின்றிருந்து கிடந்த திருக் கோலங்களில் இருந்தருளுகிறானாம். ஆழ்வாரின் கற்பனை மூன்றாந்திருவந்தாதி 34-ஆம் பாடலில் இவ்வாறு செல்கிறது. அவன் நின்றால் என்ன? இருந்தால் என்ன? கிடந்தால் என்ன?எல்லாம் அடியார் திருக்கூட்டத்திற்கு அருள்வதற்கே அன்றோ? அவன் திருவுருவ எழிலில் ஈடுபட்டு அகமகிழும் ஆழ்வார் கூடவே அவனது இருப்புக்கு ஒரு காரணமும் கற்பித்துக் கூறுகிறார். இதற்கு மாறாக 64ஆம் பாடலில் பாற்கடலைக் கடைந்து அமுது எடுத்த வருத்தம் தீர்வதற்காகவே கச்சி வெஃகாவில் பரந்தாமன் கிடந்திருந்து நின்றதாகக் கூறப் பட்டுள்ளது.

பேயாழ்வாரின் கற்பனைத் திறத்திற்கு இன்னொரு எடுத்துக்காட்டும் உண்டு. திருமாலின் திருக்கரத்தில் இலங்கும் சக்கராயுதமானது சூரியனைப் போன்று ஒளிவிட்டுப்பிரகாசிப்பது. சங்கோ சந்திரனைப் போன்று குளிர் வெண்ணொளியைப் பரப்புவது. அவனது திருவுந்திவாய் ஒங்கு தாமரை மலரோ சக்கரத்தின் ஒளியைக் கண்டு பகல் வந்துவிட்டதென்று மலர்ந்தும், சங்கத்தின் மதியொளியைப் பார்த்து இரவு போந்ததென்று கூம்பியும் திண்டாடுகிறதாம். ஆகையால் மலர்தலும் கூம்புதலும் அற்ற ஒன்றே அவனது திருவுந்தித் தாமரை என்பது தெரியலாகும். இவ்வழகிய கற்பனை 67ஆம் பாடலில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

பேயாழ்வார் வேளுக்கை, கச்சி வெஃகா ஆகிய திருத்தலங்களை

மட்டுமன்றி தாம் சென்று சேவித்த பிற நன்னகர்களையும் குறித்துள்ளார். மூன்றாந் திருவந்தாதியின் 62ஆம் பாடல் வாமனன் கோயில் கொண்டருளும் இடங்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது:

" விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர்
வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை—
மண்ணகத்தி
தென்குடந்தை தேனார் திருவரங்கம்
தென்கோட்டி
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு "

திருமாலுக்கு நூற்றெட்டுத் திருப்பதிகளும், ஊர் தோறும் திருக்கோயில்களும் இருந்தாலும் பேயாழ்வாருக்கு திருவேங்கடத்திடத்து பெரிய ஈடுபாடு உண்டு. அவர் பார்வையில் திருமலைநாதன் சிவனாகவும் காட்சி தந்தருளுகிறான். 'அரியும் சிவனும் ஒன்று' என்ற தத்துவம் அறிந்தவராக மிளிர்கிறார் பேயாழ்வார். சமய ஒருமைப்பாடு போற்றும் 63ஆம் பாடல் வருமாறு :

" தாழ்சடையும் நீள்முடியும்
ஒளிமழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும்
தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே
லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா இசைந்து "

திருவேங்கடவனை மனித குலம் மட்டும் தொழவில்லை. அருவி நீரில் கால் கழுவி, தும்பிக்கையால் தேன் மலர் பறித்துக்கொண்டு, கீழ்த் தாழ்ந்து வேங்கடவனைத் தொழும் மதயானையையும் கண்டிருக்கிறார் பேயாழ்வார். மதங்கொண்ட யானையே அவனடி பணியும் போது மற்ற உயிரினங்கள் அவனை அண்டியே வாழும் என்பதில் ஐயமில்லையன்றோ? நம் நெஞ்சத்தில் பக்தியுணர்வு குறையுங்கால் நினைவிற் கொள்ள வேண்டிய அருமையான பாடல் வருமாறு :

" புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்
தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக் கையால்
மிகுமதத்தேன்
விண்ட மலர்கொண்டு விறல்வேங்
கடவனையே
கண்டு வணங்கும் களிறு "

—(மூன்றாந் திருவந்தாதி
70ஆம் பாடல்)

கண்ணன் அவதாரத்தில் அவன் பூதனை என்ற பேய்ச்சியின் முலைப் பால் உண்டான். அதனால் அவள் செத்தொழிந்தாள். இதனைக் கண்ணுற்றப்பிறகும் 'தம்முயிருக்கு தீங்கு நேருமோ' என்று சிறிதும் கருதாது தம்முடைய முலைப்பாலை தாமோதரனுக்குத் தந்தாள் யசோதை யாகிய வளர்ப்புத் தாய். இதனை 29-ஆம் பாடல் தெரிவிக்கின்றது. நமக்கு யசோதைக்கிருந்த அளவுக்குக்கூட பெரிய தாயுள்ளம் தேவையில்லை. அவன் திருக்கோயில் சென்று இரு கரம் கூப்பி வணங்கத் தெரிந்தாலே போதும்.

" நாமம் பலசொல்லி நாராயணா
வென்று
நாமங்கை யால்தொழுதும்
நன்னெஞ்சே"

—(மூன்றாந் திருவந்தாதி
8-ஆம் பாடலடிகள்)

என்று பேயாழ்வாரும் கூறியுள்ளமை காண்க.

பேயாழ்வாரின் மூன்றாந் திருவந்தாதியின் ஒவ்வொரு பாடலையும் நாம் நின்று நிதானித்து அனுபவிப்போமானால் முத்துக் குளிப்பது போன்ற அருஞ்செயல் புரிந்தவராவோம். அனைத்துப் பாடல்களும் அருமணிகளின் உறைவிடமாய் மிளிர்கின்றன. அவை செந்தமிழ்த் தேனால் ஆக்கப்பட்டு சொல்லுவார் நாவினிக்கவும், அருகிருப்பார் பக்தி மனத்தில் திளைக்கவும் செய்ய வல்லவை. அவற்றிலே மூழ்கி அரவணையானின் அருள் பெற வேண்டுவது நம் கடனாகும்.

" திருக்கண்டே னெனநூறுஞ் செப்பி
னான் வாழியே
சிறந்தவைப்ப சியிற்சதயம்
செனித்தவள்ளல் வாழியே
மருக்கமழும் மயிலைநகர் வாழ
வந்தோன் வாழியே
மலர்கரிய நெய்தல்தனில்
வந்துதித்தோன் வாழியே
நெருக்கிடவே யிடைகழியில் நின்ற
செல்வன் வாழியே
நேமிசங்கன் வடிவழகை
நெஞ்சில்வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப்
பிரான்தொழுவோன் வாழியே
பேயாழ்வார் தாளிணையிப்
பெருநிலத்தில் வாழியே "

—வாழித் திருநாமம்,





# தென் திருப்பதி - திருவில்லிபுத்தூர்

"கோதை பிறந்தவூர் கோவிந்தன்
வாழுமூர்
சோதி மணிமாடம் தோன்றுமூர்—
நீதியால்
நல்ல பக்தர் வாழுமூர் நான் மறை
களோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக் கோனூர்"

என்று பட்டர்பிரான் திருவில்லி புத்தூரின் பெருமைகளைப் பாராட்டியுள்ளார்.

வட திருப்பதி :

வைணவத் திருத்தலங்கள் நூற்றெட்டினுள், வட நாட்டுத் திருப்பதிகளுள் தலை சிறந்தது, திருவேங்கடம் என்ற திருப்பதி திருமலை. பழந்தமிழகத்தின் வட வெல்லையாக விளங்கியவேங்கடமலை, இன்று தெலுங்கு தேசத்திற்குரிய ஒன்றாகும். உலகிலே 'வாடிகன்' நகரத்திற்கு அடுத்த ஐசுவரிய நகராகத் திகழும் சிறப்புடையது. இங்கு சீனிவாசப் பெருமாள் நின்ற கோலத்தில் எழுந்தருளிப் பக்தர்களைக் காக்கின்றார்.

தென் திருப்பதி :

பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள் 22-ள் ஒன்று திருவில்லிபுத்தூர். இவ்வூர் தமிழ் நாட்டின்கண் காமராசர் மாவட்டத்தைச் சேர்ந்துள்ளது. இவ்வூர் தென் திருப்பதி என்றழைக்கப்படுவதற்குக் காரணம், வட திருப்பதி சீனிவாசப் பெருமாள், இவ்வூரின் கண் ஒரு குன்றின்மேல் எழுந்தருளியுள்ளார் என்பது முடிவாகும்.

திருவில்லிபுத்தூர் :

திருவில்லிபுத்தூர் என்ற நாமத்தைக் கேட்டளவில் வைணவர்கள் உள்ளத்தில் பெரியாழ்வாரும், ஆண்டாள் அம்மையாரும் அவதரித்த திருத்தலம் என்ற எண்ணம் வித்திட்டு நிற்கும். "சீராரும் வில்லிபுத்தூர் என்றும்", "வில்லிபுத்தூர் என்று சொன்னாற் சுழற்கமலம் சூடினோம்" என்றும் இவ்வூரின் பெருமை பேசப்படுகிறது. வல்லபதேவ பாண்டிய மன்னனின் ஆளுகைக்கு உட்பட்ட இடைக்காலத்தில், "மென்னடை அன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்" என்று நாச்சியாரும், 'நீரணிந்த குவளை வாசம் நிகழ நாறும் வில்லிபுத்தூர்' என்று பெரியாழ்வாரும் இவ்வூரின் நிலவளத்தைப் புகழ்ந்துள்ளனர். இந்நூற்றாண்டிலே, வளங்குன்றி, வானம் பார்த்த பூமியாய் இருந்த இவ்வூரானது பல ஆண்டுகளுக்குப் பின்னர் ஏரிகளும், குளங்களும் நிறைந்து வழியும் அளவு மழை பெய்யப் பெற்று மக்கள் மனத்தை மகிழச் செய்துள்ளது.

கோயில் நகர் :

திருவில்லிபுத்தூரின்கண் வரலாற்றுச் சிறப்பு மிக்க வடபத்ரசயினார் பெருங்கோயில், ஆண்டாள் கோயில், பெரியாழ்வார் கோயில் உள்ளன. மேலும் இவ்வூரின் வடக்கே அரங்கநாதர் கோயிலும், தென் கிழக்கே கிருஷ்ணன் கோயிலும், மேற்குத் திசையில் காட்டழகர் கோயிலும், கிழக்குத் திசையில் திருமலைக் கோயிலும் உள்ளன.

திருவண்ணாமலை :

வில்லிபுத்தூரின் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ள குன்றம், திருமாலின் பாயலாகிய ஆதிசேடனின் அம்சமாகும். இக்குன்றின் உச்சியில் திருவேங்கடமுடையான் சங்கு, சக்கரப்படை கையில் ஏந்திக் காட்சியளிக்கின்றார். திருமங்கையாழ்வார், வேங்கடத்தானை "அண்ணா அடியேன் இடரைக்களைவாயே" என்று வேண்டுவார். 'அண்ணா' என்றழைக்கப்படும் திருவேங்கடமுடையான் இம்மலையில் எழுந்து அருளியுள்ளமையால் இம்மலை இப்பெயர் பெறக்காரணமாகலாம். சீனிவாசப் பெருமாள் வேட்டையாட இக்குன்றம் வந்து, பக்தர்களைக் காப்பதாகப் புராணம் கூறுகிறது. வட திருப்பதியில் பத்மாவதி தாயாருக்காக, சீனிவாசப் பெருமாள் எழுந்தருளினார்; தென் திருப்பதியில் கோதை நாச்சியாருக்காக எழுந்தருளினார் என்றும் கருதலாம்.

*திருமதி கே. தேவகி பிரகாசம்,*
*திருப்பதி.*

ஆண்டாள் திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருமலை முதலிய பதிகளுக்குத் தலைவனான நாராயணனே தனக்குப் பதியானவன் என்று பாசுரம் பாடியுள்ளார்.

கர்ண பரம்பரைக் கதை :

ஆண்டாளுக்குத் திருமண ஏற்பாடுகள் நடப்பதை அறிந்து, 108 திவ்ய தேசப் பெருமாளும், திருமணத்தில் கலந்து கொள்ள வந்தனர் என்றும், ஆண்டாளை விரும்பிய ரெங்க மன்னார், கோழி வடிவமெடுத்துக் கூவவும் பொழுது புலர்ந்தது என்பதால், சீனிவாசப் பெருமாள், திருவில்லி புத்தூரை நோக்கி வந்தவர், கோழிச் சத்தத்தைக் கேட்டு அவ்விடத்திலே நின்று விட்டார் என்றும் கதை கூறுகின்றனர். அதுவே திருவண்ணாமலையாகும் என்றும் கூறுவர். இன்றும், வருடம் ஒரு முறை, ஆண்டாளுக்குச் சாத்தும்படியான மாலையொன்று, புரட்டாசி மாதத்தில் திருவேங்கடமுடையானுக்கு (திருப்பதி

மலைக்கு) அனுப்பப்படுகிறது. இவ்வாறே சித்திரைத் திருவிழாவின் போது, வைகை ஆற்றில் அழகர் (திருமாலிருஞ்சோலை சுந்தரராஜ பெருமாள்) இறங்கும்போது, ஆண்டாள் சூடிய மாலையை அணிந்து செல்வதற்காக, வருடா வருடம் இம் மாலையை முதல் நாளே திருவில்லிபுத்தூரிலிருந்து மதுரைக்கு அனுப்பி விடுவ்து வழக்கம்.

**தீர்த்தங்கள் :**

திருவில்லிபுத்தூரில் திருக்குளம், கண்ணாடி தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், திருப்பாற்கடல், சக்கரத் தீர்த்தம், நூபுர கங்கை, கோனேரி தீர்த்தம், ரெங்க தீர்த்தம், பஞ்ச தீர்த்தம் எனப் பல தீர்த்தங்கள் உள்ளன.

**கோனேரி தீர்த்தம் :**

திருவண்ணாமலையின் அடிவாரத்தில் கோனேரி தீர்த்தம், ஒரு குளமாகக் காட்சியளிக்கின்றது. இது 'பம்பைத் தீர்த்தம்' என்றும் அழைக்கப்படும். வடதிருப்பதியில்சுவாமிபுஷ்கரணி போன்று, இத்தென் திருப்பதியில், இப்பம்பைத் தீர்த்தம் சிறப்புப் பெற்றது. இதன் பெருமைகளை ஆதிசேடனாலும் வருணிக்க இயலாத ஒன்று என்று புராணம் கூறுகிறது.

இத்தீர்த்தத்தில் நீராடினால், செல்வமும், புகழும் பெற்று இவ்வுலகில் வாழ்ந்து, மறுமையில் திருமாலின் பாதம் அடைவர் என்ற நம்பிக்கை உண்டு. இக்குளத்தில் சாதி வேறு பாடின்றி, அனைவரும் நீராடி, இறைவனுக்குத் தங்கள் நேர்த்திக் கடன்களைச் செலுத்துகின்றனர்.

புரட்டாசி மாதம் சனிக்கிழமை தோறும், இலட்சக்கணக்கான மக்கள் பெருமானைத் தரிசிக்க வருகின்றனர். வட திருப்பதி போன்று, இங்கும் மொட்டையடிப்பது, பிள்ளைகளுக்குக் காது குத்துதல் போன்றவை நிகழும்; மேலும் பக்தர்கள் தங்கள் நிலத்தில் விளைந்த பொருட்களைக் காணிக்கையாகச் செலுத்துவது மரபாகும்.

ஆடு, மாடுகளை நேர்த்திக் கடனுக்காகத் தங்கள் இல்லத்தில் வளர்த்து, கோயிலுக்கு விடுவதும் உண்டு. பக்தர்கள், மாவிளக்கு வைத்து, இறைவனுக்குத் தேங்காய் பழம் வைத்து அர்ச்சிப்பதும் வழக்கம்.

**பாத தரிசனம் :**

திருவண்ணாமலைக் குன்றின் உச்சியில், சீனிவாச பெருமானின் பாதங்கள் இரண்டு மிகப் பெரிய அளவில் செதுக்கப்பட்டுள்ளன. வேறெந்தக் கோயிலிலும் இத்தகைய பாத அமைப்பு உண்டா? என்று ஆராய்தல் வேண்டும். பக்தர்களுக்குப் பாத தரிசனம் இக்கோயிலிலேயே கிடைக்கின்றது. மற்றொரு சிறப்பு அம்சம் என்னவெனில் இக்கோயிலுக்குப் பக்தர்கள் காணிக்கையாகப் பெரிய பாதரட்சைகளைச் செலுத்துகின்றனர். இம்மரபு வேறெங்கும் காணவியலாத ஒன்று. மலையேறிச் செல்லும் பக்தர்கள், [illegible]யில் குவிந்து கிடக்கும் பாதணிகளை எடுத்துத் தங்கள் தலையில் அடித்துவிட்டுப்போட்டுச் செல்வதைக் காணலாம்.

மலை மீதேறி வராத பக்தர்கள், கோயிலின் அடிவாரத்தில், குளத்தில் நீராடி, பெருமாளுக்குப் படையல் செய்ய விரதம் இருந்து, பெருஞ்சோறு அமைத்து அன்னதானம் செய்யும் வழக்கம் உண்டு. அத்தகைய நாளில், சமையல் முடித்ததும், பக்தர்கள் தங்களுடைய படையலை இறைவன் ஏற்றுக் கொண்டாரா என்பதை அறிய வானம் நோக்கி இருப்பர். அந்நிலையில் கருடன் வட்டமிட்டால் இறைவன் ஏற்றுக் கொண்டதாக எண்ணி, அன்னக்குவியலை பார்த்தால், அதில், இறைவனது இரு பாதங்கள் தெரியும் என்று நம்புகின்றனர்.

திருவில்லிபுத்தூரிலே பெருமாளின் பாத தரிசனம் கண்டவர்கள், ஆண்டாள், வடபத்ர சயனம் கோவிலுக்குச் செல்வது வழக்கம்.

**கோபுர அழகு :**

ஆண்டாள் கோயில், கோபுரம் உயர்ந்து வானளாவித் தோன்றுவதைப் பக்தர்கள் ஊரில் எல்லையை அடையும் போது காணலாம். ஆண்டாள் கோயிலின் கோபுரம், தமிழக அரசு சின்னத்தில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

**தேர் :**

தென்னகத்தில் திருவாரூர்த் தேர்க்கு அடுத்து, திருவல்லிபுத்தூர் தேர் சிறப்புப் பெற்ற ஒன்று. தேர் நிலையிலிருந்து புறப்பட்டு, மறுபடியும் நிலைக்கு வர ஆறு மாத கால ஆகும். தற்போது, பெரும் முயற்சியினால் நவீன வசதி படைத்த இயந்திரக் காலத்தில் சக்கரங்கள் இலகுவாக இயங்கும்படி செய்யப்பட்டு, ஒரே நாளில், புறப்பட்ட இடத்திற்கே வந்து சேர்ந்த பெருமை இவ்வாண்டு ஏற்பட்டுள்ளது. ஊரும் இவ்வாண்டு மழையினால் செழிப்புற்று விளங்குவதைக் காணலாம்.

**ஆண்டாள் :**

பூதேவியின் அம்சமே, திருவில்லிபுத்தூரில், ஆண்டாளாக அவதாரம் செய்ததாகப் புராணம் கூறுகின்றது. குழந்தைச் செல்வம் இல்லாத பெரியாழ்வாரின் நந்தவனத்தில் கலியுகம், 98வது வருடமான நள வருடம் ஆடி மாதம் செவ்வாயன்று பூர நட்சத்திரத்தில் 'ஆண்டாள்' அவதாரம் செய்தாள். நந்தவனத்தில், துளசிச் செடியருகே, பூமி வெடித்து ஐந்து வயது குழந்தையாகப் பெரியாழ்வாருக்குக் கிட்டினாள். கோதை என்ற பெயர் சூட்டி வளர்ந்த ஆண்டாள், கன்னிப் பருவத்தில் இறைவனுக்குத் தான் சூடிய மாலையை அனுப்பினாள். சூடிக் கொடுத்த சுடர்க்கொடி என்றும், சூடிக்

கொடுத்த நாச்சியார் என்றும் பெயரினைப் பெற்ற ஆண்டாள், அரங்கநாதனைத் தன் மணாளனாக வரித்தாள். தன் தகப்பனாருடன் 108 திவ்ய தலங்களுக்குச் சென்று வந்தாள். மார்கழி நோன்பு நோற்றுத் திருப்பாவை பாடியவள்; அரங்கநாதனோடு இரண்டறக் கலந்தவள்.

பூமிதேவியான ஆண்டாள் திருமடியில், கிருஷ்ணன் கோயிலில் ஆடிப்பூர விழாவின் ஏழாம் நாள் ரெங்கமன்னார் தலை வைத்துச் சயனம் செய்யும் காட்சி காணுவதற்கரிய ஒன்று.

பெரியாழ்வார் :

பெரியாழ்வார் கருடாழ்வாரின் அம்சமாவார். வேயர் குலத்தில் முகுந்தன் என்பாருக்கும், பதுமவல்லி அம்மையாருக்கும் மகனாய்த் தோன்றியவர். இறைவனுக்கு மாலை சூட்டும் கைங்கரியத்தை ஏற்று, மலர்வனம் அமைத்து, இறைவனைப் பூசித்தார்.

வல்லதேவ பாண்டிய மன்னனுக்கு ஏற்பட்ட ஐயத்தைப்போக்கிப்பொற்கிழி பெற்றார். 'அகர முதல எழுத்திற்கெல்லாம் ஆதியாகவும் எங்கும், எல்லாம்', எப்பொழுதும் நிறைந்திருக்கும் பரம்பொருள் ஸ்ரீமத் நாராயணன்' என்பதை விசிஷ்டாத்வைதத்தின் வழி விளக்கினார்.

பல்லாண்டு பாடுதல் :

இறைவன் தன் பேரின்பத்தைக் காட்டி நிற்பதைக் கண்டு உள்ளத்தில் அன்பு பெருகி, கண் திருஷ்டி பட்டுவிடக் கூடாதே என்றெண்ணி, இறைவனுக்குப் பல்லாண்டு பாடினார். தன் ஊர் திரும்பி, இறைவனுக்குப் பாடிய 473 பாசுரங்கள் பெரியாழ்வார் திருமொழி எனப்படும். பூமிதேவியின் அம்சமான ஆண்டாளைப் பெண் குழந்தையாக அடையப் பெற்று, அரங்கநாதனை மருமகனாக அடையும் பேறு பெற்றவர்.

## புண்ணிய கர்மம்

புண்ணிய கர்மங்களைச் செய்யவேண்டும். புண்ணியம் செய்தவர்கள் தாங்கள் செய்தவற்றைக் கூறிப் புகழ்ந்து கொள்ளுவது கூடாது.செய்த தர்மத்தைச் சொல்லுவதனால் அது அழிந்து விடுகிறது. இவ்விதம் சொல்லுவதில் ஒரு யுக்தியும் இருக்கிறது. தான் செய்த தர்மத்தைப் பிறரிடம் கூறும் போது அவர்கள் கொடுக்கும் பணத்தாலோ செய்யும் மகிழ்ச்சியாலோ சுகத்தை அடைகிறான். தர்மத்தின் முடிவான பலனாகிய சுகத்தை அவர்கள் இவ்விதம் அடைந்துவிடுவதால் செய்த தர்மத்திற்கு வேறு பலன் இல்லாமல் போய்விடுகிறது. மேலும், தர்மத்தைச் சிரத்தையுடன் செய்ய வேண்டும். தட்சன் சிரத்தையில்லாமல் செய்த யாகம் அவனுடைய நாசத்திற்கே காரணமாக ஆகிவிட்டது.

—சிருங்கேரி ஸ்ரீமகா சுவாமிகள்

## துளசியின் பெருமை

துளசியின் பெருமையைக்கூறும் கதைகள் பல. வீட்டில்துளசியை வளர்த்து வணங்குதல் இறைவனை வணங்குவதற்கு ஒப்பாகும். துளசியருகே இருப்பான் நாராயணன். காலையில் துளசியைத் தரிசிப்பவரின் தீவினைகள் அப்போதே மறையும். துளசி நீரின்றி துவாதசிப் பாரணை இல்லை. மகாலக்ஷ்மி துளசி ரூபத்தில் இருக்கிறாள் என்றே துளசி வழிபடப்படுகிறது. துளசியோடு தரப்படாத தானம் வீண். கண்ணனின் திருவடித் துளசி தளம். தராசில் கண்ணன் எடைக்கு ஈடாகி நின்றது சத்தியபாமை சூடியிருந்த ஆபரணங்களின் எடையெல்லாம் கண்ணன் திருவடித் துளசி தளத்துக்கு ஈடுகட்ட வில்லை. திருவிபூதி உபநிஷதம் துளசி வைகுண்டத்தில் இருப்பதாகக் கூறுகிறது.

துளசியே இறைவன். துளசியை இறைவனுக்கு அணிவிப்பது அவசியம்.

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

—திரு. A. N. சுப்ரமணியன் - குடியாத்தம்.

வளர்ப்புப் பெண்ணான ஆண்டாள் அரங்கநாதனை மணாளனாக வரித்த காலத்து, இறைவன். இவர் கனவில் தோன்றி, ஆண்டாளைத் தன் ஊருக்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டதாகவும், வல்லபதேவ பாண்டியன் உதவியால் பரிவாரங்களுடன் அரங்கநாதபுரம் சென்றார் எனவும், அங்கே ஆண்டாள், இறைவனுடன் இரண்டறக் கலந்தாள் என்றும் கூறப்படுகிறது. பெரியாழ்வாரின் வேண்டுகோளுக்கிணங்கத் திருவில்லிபுத்தூரில் பெருமாள், ஆண்டாளுடன் காட்சியளித்தார் என்பதும், அவர்களுக்குக் கோயில் கட்டி பெரியாழ்வார் வழிபட்டார் என்பதும் வரலாறு.

செவி வழிக் கதை :

ஆண்டாள் திருமணத்தைப் பெரியாழ்வார் திருக்குருகூரில் நம்மாழ்வாரைக் கொண்டு அவரது மாளிகையில் நடத்தினார் என்றும், அதற்கு 108 தல பெருமாள்களும் வந்தனர் என்றும், நான்முகன் புரோகிதம் செய்து திருமணம் நடந்தது என்றும், மறுநாள் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சிப்பாடினார் என்றும், ரெங்க மன்னார் ஆண்டாளுடன் கருட வாகனத்தில் ஆகாயத்தில் தோன்றிப் பக்தர்களைப் பரவசப்படுத்தினார் என்றும் கூறுவர்.

வட திருப்பதி போன்று, இங்கும் நின்ற கோலத்தில் சங்கு சக்கரத்துடன் காட்சியளிக்கின்றார்.

*

# ஆதிரை விழாவும் ஆடும் பெருமானும்




திருவாதிரைத் திருநாள் பல நூற்றாண்டுகளாகத் தமிழகமெங்கும் தொடர்ந்து கொண்டாடப்பட்டு வருகிறது. ஆக்கிய திருவடியோன் நடராஜப் பெருமானைச் சிறப்பித்து வழிபடுவதற்காக ஏற்பட்ட விழா விது. சைவ சமயத்தில் கூத்தப் பெருமானுக்கு என்றுமே சிறப்பிடம் உண்டு.

சங்கத் தமிழ் இலக்கியங்கள் சிலவும், தேவாரம், திருவாசகம்போன்ற அருள் நூல்களும் நடராஜப் பெருமானின் சிறப்புக் குறித்து பல வகைகளில் வர்ணிக்கின்றன. இது தவிர நம் பண்டைய சிற்பக் கலைஞர்கள் தாம் வடித்த சிற்பங்கள், கல்வெட்டுக்கள் ஆகியவற்றிலும் இவரது பெருமைக்குத் தனி இடம் தந்திருக்கிறார்கள்.

இலக்கியத்தில்......

"இன்பமான மார்கழி மாதத்தில் அதுவும் திருவாதிரையில் தாண்டவ மூர்த்தியை வழிபடுக" என்று காரணாகமம் கூறுகிறது.

திருஞான சம்பந்தர் பூம்பாவைப் பதிகத்தில் "கார்தருசோலைக் கபாலீச்சரம் அமர்ந்தான் ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்!" என்று பாடியிருக்கிறார். திருமுறைகளில் அனேகமாக ஆதிரையன் என்று சிவபெருமானைப் பற்றிச் சொல்லப்படுவதால் அவ்விறைவனுக்குத் "திருவாதிரை"யே சிறந்த நாள் என்று சொல்லலாம்.

சிதம்பரத்தில் மார்கழி திருவாதிரையன்று பல்லாயிரக்கணக்கான மக்கள் கூத்தபிரானின் கோலாகலத் தாண்டவத்தைப் பார்த்து மகிழ்கிறார்கள்.

## "சன்மிஷ்டை"

ஆதிரையானின் நடனம் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெரும் தொழில்களைக் குறிக்கும். இதை தேவாரப் பாடல்கள் உணர்த்தியுள்ளன. ஆண்டவனின் ஆட்டத்தை "ஊன நாடகம் ஆடுவித்தவா—உருகி நான் உனை பருக வைத்தவா—ஞான நாடகம் ஆடுவித்தவா—நைய வையகத்துடைய விச்சையே" என்று மாணிக்க வாசகர் பாடிப் போற்றுகிறார்.

"இந்துவாழ்சடையான் ஆடு மானந்தவெல்லையில் தனிப்பெருங் கூத்து" என்றும் 'ஆதியும் முடிவு மில்லா அற்புதத் தனிக்கூத்து' என்றும் சேக்கிழார் பெரிய புராணத்தில் பாடியிருக்கிறார்.

கல்வெட்டுக்கள்.........

செங்கை அண்ணா மாவட்டத்தில் திருவள்ளுரையடுத்த திருப்பாச்சூரில் உள்ள திருபுவனச் சக்கரவர்த்தி ராஜ ராஜ சோழனது இருபத்து ஐந்

ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டொன்று சோழ உத்தமபுரத்தைச் சார்ந்த பனையஞ் சேரியுடையான் நம்பி ஆரூருடைப்பிள்ளையென்னும் வணிகன் மார்கழி திருவாதிரை நாளன்று தனி ஆராதனைகள் நடத்திட முப்பது காசு மான்யமாக அளித்ததாகக் கூறுகின்றது.

தவிர, தஞ்சை மாவட்டம் திருக்கோடிக் காவலில் உள்ள மற்றோர் கல்வெட்டு சோழ மன்னன் குலோத்துங்கனின் 34-ம் ஆண்டில் தில்லையம்பல விழுப்பரையன் என்பான் நடராஜப் பெருமானுக்கு திருவாதிரை நாளன்று திருமஞ்சனம் செய்விப்பதற்காக நிலமளித்த தகவலைத் தருகிறது.

"ஆனைடை நாச்சியார்" என வழங்கப்படும் தேவிக்கு ஆருத்ரா (திருவாதிரை) தினத்தன்று பூஜை புரிய பனையூரைச் சார்ந்த பெரிய பனை மாட்டான் என்பான் நிலம் அளித்ததாக, சேலம் மாவட்டம் நாமக்கல் தாலுக்காவிலுள்ள வளப்புற நாட்டில் இருக்கும் ராஜாதி ராஜசோழனின் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு மூலம் அறிகின்றோம்.

சிற்பங்களும் படிமங்களும் :

நடராஜப் பெருமானை மையமாக வைத்து திருவாதிரைத் திருநாள் வளர்ந்து சிறப்பு பெற்றதால், நமது ஆலயங்களில் அவருக்குக் கல்லிலும், செப்பிலும் கணக்கற்ற உருவங்கள் சிற்பக் கலைஞர்களால் உருவாக்கப் பட்டன. பல்லவர் தலைநகரான காஞ்சியில் கைலாசநாதர் கோவிலில் சிவனாரின் தாண்டவக் கோலங்கள் அற்புதமாக உள்ளன.

அவற்றில் சிவபிரானின் "ஸ்தல ஸம்ஸ்போடித" (ஸ்வஸ்திக்' டான்ஸ் எனவும் சொல்லப்படுவதுண்டு.) நடனம் குறிப்பிடத்தக்கது. தஞ்சை, கும்பகோணம், சிதம்பரம் ஆகிய இடங்களில் காணும் சோழர் பாணி நடராஜர் சிற்பங்கள் கண்கவர் வனப்புடையவை. தஞ்சை பெருங்கோவிலுள்ள சிவபிரானின் கரங்களில் 88-ஐக் காணலாம். எஞ்சியவை முடிவுறாமலேயே நின்றுபோயுள்ளன.



வேந்தன்பட்டி ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கேஸ்வரர் கோயில்
- மீனாட்சி திருக்கல்யாணம்

சிற்பங்களைப் போலவே அழகிய படிவங்களும் உள்ளன. கும்பகோணத்தை யடுத்த நல்லூரில் இன்னும் வழிபாட்டிலிருந்து வரும் நடராஜ உற்சவ விக்ரகம் கி. பி. 9-ம் நூற்றாண்டைச் சார்ந்தது ஆகும். ஏற்றமும், எழிலும் மிக்க இப்படிமம் "சதுரத் தாண்டவக் கோலத்தில்" உள்ளது. (அதாவது நடனமாடும் இரு கால்களுக்கு மிடையேயுள்ள இடைவெளி சதுர வடிவில் உள்ளது,

அதுபோலவே, புதுக்கோட்டையை அடுத்த. திருவரங்குளத்தில் கண்டெடுக்கப்பட்டு, தற்போது புதுடில்லி தேசியப் பொருட் காட்சியில் இருப்பதுமான நடராஜரின் படிமமும் நேர்த்தியான வேலைப்பாடு அமைந்ததொன்றாகும்.

மற்றும் தஞ்சை மாவட்டத்தில் ஆனைக்குடி, சிவபுரம், வேளாங்கண்ணி ஆகிய இடங்களில் உள்ள நடராஜரின் படிமங்களும் நனின மானவையே! சிவபாத சேகரனான சோழ ராஜராஜன் தான் எழுப்பிய தஞ்சைப் பெருவுடையார் கோவிலுக்கென உருவாக்கப்பட்ட உன்னதமான நடராஜரின் திருமேனி இன்றும் அக்கோயிலில் வழிபாட்டில் இருந்து வருகின்றது. அதன் பீடத்தில் கல்வெட்டும் ஒன்றும் இடம் பெறுகிறது.

மற்றும் அரக்கோணத்தை அடுத்த திருவாலங்காட்டில் கண்டெடுக்கப் பட்டுத் தற்போது சென்னை தேசியக் கலைக்கூடத்தில் உள்ள நடராஜரின் படிமம், சேமங்கலத்துப்படிமம், திருக்குடந்தை நாகேசுவரர் கோயிலிலுள்ள படிமம், பேலூர் (சேலம் மாவட்டம்) படிமம் போன்றவையும் எழில் படைப்புக்களே.

ஆதிரை நாளில் அவதரித்த சிவ பெருமானுக்கு "திருவாதிரை திருநாள்" சிதம்பரத்தில் விசேஷமானது. அரக்கன்மீது ஆண்டவன் களிநடனம் புரிவது, நாம் நம் அறியாமையைக் கொல்ல வேண்டுமென்று குறிப்பிடுவதாகவே கருத்து.



**மா**யை என்ற சொல்லை நாம் அன்றாடம் பயன்படுத்தி வருகிறோம். ஒரு பொருள் காணாவிட்டால், "வைத்தது எங்கே மாயமாகி விட்டது?" என்கிறோம். நடந்த ஒரு செயல் தெளிவாக விளங்காவிட்டால் "எல்லாம் மாய மந்திரமாக இருக்கிறது!" என்கிறோம். கருத்துத் தெளிவு குழப்பமாக இருக்கும் பொழுது, "ஒரே மயக்கம்! மாயமாயிருக்கிறதே!" என்று கூறுகிறோம்.

எனினும் மாயை என்பதற்குப் பலர் பலவிதமாகப் பொருள் கூறுகின்றனர். மாயை என்பது ஒரு தோற்றம். இது இந்திரஜாலக்காரனுடைய வித்தையைப் போன்று க்ஷணிகத் தோற்றம் என்பர் சிலர். இரு எழுத்துக்களைக் கொண்ட இந்த மாயை என்பதற்குப் பொருளை அறிய முற்பட்டு உலக மக்கள் மயக்கமே அடைகின்றனர்.

# மாயை

"மாயையை வென்றாலன்றி என்னை அடைய முடியாது. என்னையே குறியாகக் கொள்பவர் மாயையை எளிதில் வெல்லுவர்!" என்று கண்ணபிரான் ஸ்ரீமத் பகவத் கீதையில் குறிப்பிடுகிறார்.

விளக்கொளியில் மயங்கி விட்டில் பூச்சிகள் மாய்கின்றன. அதுபோல் மக்கள் அஞ்ஞானத்தில் மூழ்கி மாய்கின்றனர். உயிர்களின் தவிப்பைத் தவிர்க்க அருள் வள்ளல் ஆதிசங்கரர் மாயை பற்றிக் கருத்துக்களைத் தெளிவுபடுத்துகிறார்.

உலகங்கள் அனைத்தும் பஞ்ச பூதங்களைக் கொண்டு உருவானவை. இந்தப்பூமியில் பிறந்த பொருள்கள் அனைத்தும் வாழ்ந்து மடிவது இயல்பு. தோன்றுபவை அனைத்தும் காலனுக்கு இரையாகின்றன. காலனுக்கும் காலனாக எந்தப்பொருள் உள்ளதோ, அதுவே மெய்ப்பொருளாகும். அது எங்கும் எக்காலத்திலும் நிறைந்து பரவியுள்ளது. அது உருவ, நாம வேற்றுமை இல்லாதது. பாத்திரத்தில் உள்ள நீர் ஒடுங்கி இருக்கிறது. அதைக் கொட்டினால் பரந்து விரிந்து தோன்றுகிறது. பாத்திரத்தினுள் அடங்கியுள்ள நீர் பிரஹமம் எனப்படும். பாத்திரத்திலிருந்து வெளியே வந்த விரிந்த நீர் பிரஹ்மம் எனப்படும். இதிலிருந்து பிரஹமம், பிரஹ்மம் என்பதனுடைய கருத்தினை அறிகிறோம். எனவே தோற்றங்களினுள் ஒளிர்வது பிரஹமம். தோற்றத்துக்கு அப்பால் உள்ளது பிரஹ்மம். இந்த நுட்பத்தை விளக்குவதுதான் பிரஹ்ம ஞானம். இதனைத் தெளிவு படுத்தவே ஸ்ரீ ஆசார்யர்கள் அவதாரம் செய்கிறார்கள்.

பிரஹ்மம் இருவகைப்படும். நிர்க்குணப் பிரஹ்மம், ஸகுண பிரஹ்மம் ஆகும். கண் பார்வையாகிய உள்ளொளியைக் கொண்டு, வெளித் தோற்றத்தைக் காண்கிறோம். உள்முகமாக உள்ள ஆனந்த சொரூபியே நிர்க்குணப் பிரஹ்மம் ஆகும். பஹிர் முகமாகக் காணும் போது ஸகுண பிரஹ்மம் ஆகும். எனவே அகண்ட கூட்டுக்குள் ஒளிரும் ஒரே பொருள் பிரஹ்மம் ஆகும்.

துவைதம் என்றால் ஒன்றுக்கு மேற்பட்ட பாவனை. மத்துவாச்சாரியார் பரமான்மாவும், சீவான்மாவும் வேறு என்று கூறினார். இது துவைதம் ஆகும். ஆனால் அத்வைதம் என்றால் இரண்டற்ற ஒரு பொருளாகும். அத்வைத விளக்கம் ஆதிசங்கரரால் விளக்கப்பட்டுள்ளது. அத்வைதத்தில் ஆதிசங்கரர், "பிரஹ்மம் சத்யம்", "ஜகத் மித்யை" என்ற இரு கருத்துக்களைத் தெளிவாக விளக்கியுள்ளார். பிரஹ்மம் என்னும் உண்மைப் பொருள் ஒன்றே சத்தியமானது என்பதை விளக்குவதுதான்பிரஹ்மம் சத்தியம் எனப்படும். தோன்றும் இந்த உலகம் உண்மையல்ல என்பதை விளக்குவதுதான் "ஜகத் மித்யை" எனப்படும். இந்த இரண்டு கருத்துக்களில் முதல் கருத்தாகிய, "பிரஹ்மம் சத்யமாக வேண்டும்" என்பதே ஆன்றோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். எனினும் பிரஹமம் நமக்குத் தென்படவில்லை. நாம் உலகைக் காண்கிறோம். பல இடங்களுக்குச் சென்று வருகிறோம். பொருள்களை அனுபவித்து வருகிறோம். எனினும் இவையெல்லாம் "மித்யை" என்று ஆன்றோர்கள் கூறும்போது நமக்குத் தடுமாற்றம் ஏற்படுகிறது. காரணம் பிரஹமம், பிரஹ்மம் என்பதன் வேறுபாட்டை அறியாமல் இருப்பதுதான்.

தன்னைப் பற்றிப் பெருமைப் படுவதும், தனக்கே சில பொருள் உரியது என்று எண்ணுவதும் மாந்தரியல்பு. "நான்" என்னும் அகங்காரமும், "எனது" என்ற மமகாரமும் கொண்டவன் மனிதன். அகங்காரம், மம

கவிஞர் திரு. அ. காசி, எம்.ஏ., எம்.எட்,
அருப்புக்கோட்டை.

காரம் என்ற பிரிவை உடைய ஆணவம் இருத்தல் கூடாது. இத்தகைய ஆணவத்தினால் நம்மிடையே துவைத பாவனை ஏற்பட்டு "உலகே மித்யை" என்று கூறுகிறோம்.

உலகத்தை மித்யை, துச்சம் என்று தள்ளக்கூடாது. வாழ்ந்தோர் பிறவிப் பயனை அடைய வேண்டுமென்பதே குறிக்கோளாகும்.

இவ்வுலகில் பாமரர், பண்டிதர், ஞானியர், பிரஹ்ம ஞானியர் என்று பல பெயர்களுடன் மக்கள் வாழ்கின்றனர். "எல்லாம் பொய், எல்லாம் மெய்" என்று அறியாமையால் பிறருடன் ஒத்துப் பாடுபவர்கள் பாமரர் எனப்படுவர். சாத்திரங்களையும் பிரமாணங்களையும் வாதமிடாமல் கற்றவர்கள் பண்டிதராவர். காணுபவை அனைத்தும் துச்சம், வாழ்வே வேண்டாம் என்று கூறுபவர்கள் ஞானிகள். பிரஹ்ம ஞானிக்கோ அவனே பிரஹ்மம், அனைத்தும் பிரஹ்ம மயம், ஒன்றும் விலக்கில்லை எல்லாம் வேண்டும் என்று கூறுவார்கள். பிரஹ்ம ஞானிகள் ஞானக்

கனலில் புடமாகியவர்கள். நெல்லைச் சட்டியில் போட்டு வறுத்தால் அந்நெல் முளைக்காது. அதைப்போல பிரஹ்ம ஞானிகளின் உள்ளம் ஞானக் கனலில் புடமாகி விடுகிறது. ஆசாபாசமோ, பற்றோ ஒழிந்து அவன் சுத்த ஞான சொருபமாகி விடுகிறான். அவன் நம்மைப் போலவே பேசுவான். சாப்பிடுவான் செயல்களை எல்லாம் செய்வான். எனினும் ஒன்றிலும் ஒட்டாமல் உலகத்தில் உலவி வருகிறான். உலக மக்கள் அவனுக்காக வாழ்கிறார்கள். அவன் உலகத்துக்காக வாழ்கிறான்.

வாழ்க்கையில் நமக்கு ஒரு எஜமானன் இருந்தால், அவனுக்குத் தனி மதிப்புக் கொடுக்கிறோம். அவன் வசிக்கும் இடத்தையும் மதிக்கிறோம். அது போலவே நம்மையும் உலகையும் படைத்தவன் இறைவன். அவன் நமக்கு எஜமானன். அனைத்து இடமும் இறைவன் இல்லம். இறைவன் எங்கும் எப்படியும் எப்பொழுதும் குடியிருந்து கொண்டே வருகிறான். எனவே நாம் உலகமாகிய ஜகத்தையும் துச்சமெனத் தள்ள வேண்டியதில்லை.

எனவே மகிமைவாய்ந்த மாயைக்குப் பொருள் கூறப்போனால் எவருக்கும் மயக்கமே வரும். எனினும் மேற்கண்ட கருத்துக்களைக் கொண்டு மாயையை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை ;

1) தோற்றங்கள் அனைத்தும் காலனுக்கு உட்பட்டவை. தோற்றங்களைக் கொண்டு அவற்றை உண்மை என வாதம் செய்து, பந்த பாசத்தை ஏற்படுத்தி சிக்கலை உண்டாக்குகிறோம். அச்சிக்கலே மாயையாகும்.

2) பிரமை, அவித்தை, அஞ்ஞானம் என்பதே மாயையாகும்.

3) நம்முடைய ஐந்து கரணங்களையும் செயல்படுத்தி. அதைக் கொண்டு நாமே பின்னிக்கொள்ளும் வலிமை மிக்க வலையே மாயை.

" மாயை பொய்யெனல் முற்றிலும்
கண்டனன்
மற்றும் இந்தப் பிரமத்
தியல்பினை
ஆய நல்லருள் பெற்றிலன் ! "

என்று அமரகவி பாரதியார் கூறுகிறார். ★

## செய்த பாவத்திற்கு பிராயச்சித்தம் !

விசுவாமித்திர முனிவர் மிகுந்த தபோ பலம் உள்ளவர். ஒரு சமயம் அவர் தன்னுடைய வேள்வியைக் காக்க தசரத சக்கரவர்த்தியிடம் வந்து உன்னுடைய பிள்ளை ஸ்ரீராமனை 'நான் செய்யும் வேள்வியைக் காக்க அனுப்ப வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தசரத சக்கரவர்த்தி பிள்ளையின் மீதுள்ள பாசத்தால் நான் என்னுடைய சேனையுடன் வந்து தங்களது வேள்வியைக் காக்கிறேன். ஸ்ரீராமன் சிறு பையன். அவனுக்கு அரக்கர்களுடன் சண்டை செய்ய போதுமான பயிற்சியும் இல்லை', என மிக வருத்தப்பட்டுத்தான் வருவதாகக் கூறினார். ஆனால், விசுவாமித்திரரோ, ஸ்ரீராமனை அனுப்ப வேண்டும் என்று மிகப் பிடிவாதமாகக் கூறி இல்லையேல் தான் செல்வதற்குத் தயாராக இருந்தார். வேறு ஒரு சமயமாக இருந்தால் 'இந்தா பிடி சாபம்' என்று கொடுத்திருப்பார். ஆனால் இப்போது அவர் எப்படியாவது ஸ்ரீராமனை அழைத்துச்செல்லுவதிலேயே குறியாக இருந்ததால் செல்வது போல் பாவனை காட்டினார்.

அவருக்கு நான் செய்யப்போகும் வேள்வியைக் காக்க போதுமான தக்க பலம் தன்னிடமே இருந்தது. அவர் திரிசங்குக்காக ஒரு புது சொர்க்கத்தையே சிருஷ்டி செய்தவர். அவ்வளவு தபோ பலம் உள்ளவர், உலகத்திற்கு மிக உயர்ந்த ஸ்ரீ காயத்ரி மந்திரத்தை அளித்தவர், இவ்வளவு இருந்தும் அவர் ஸ்ரீராமனை வேள்விகாக்கக் கூப்பிட்டதில் ஓர் உண்மை இருந்தது. தான் முன்பு ஒரு சமயம் செய்த பாவத்திற்காக பிராயச்சித்தம் செய்ய வேண்டி இன்று அவர் ஸ்ரீராமனை வேண்டினார்.

அதாவது இதே சூரிய குலத்தில் மிகக் கீர்த்தியுடன் வாழ்ந்து வந்த மிகப்பெரிய சக்கரவர்த்தி ஹரிச்சந்திரனையும் அவர் மனைவி சந்திரமதியையும் தான் போட்ட சபதத்திற்காக வெகுகாலம் கணவன் மனைவியை பிரித்து வைத்தார். அந்த தம்பதிகளைப் பிரித்த பாவத்திற்குத் தற்போது திருப்பாற்கடலிலிருந்து பிரிந்து வந்து உள்ள தம்பதிகளை மீண்டும் சேர்க்க (சீதாராமாக்கல்யாணம் நடத்தி) ஸ்ரீராமனை வேள்விக் காக்க வேண்டும் என்று அழைத்துச் சென்று அந்த திவ்ய தம்பதிகளை சேர்த்து அயோத்திக்கு அழைத்து வந்தார்.

முன்பு, அயோத்தி அரசன் ஹரிச்சந்திரா தம்பதிகளை பிரித்த பாவத்திற்கு பிரயாச்சித்தமாக இப்போது பிரிந்துள்ள தம்பதிகளைச் சேர்த்து அயோத்திக்கு அழைத்து வந்தார்.

அவர் பாவமும் பிராயச்சித்தம் ஆயிற்று.

ஸ்ரீ ராமாயண பாலகாண்ட சொற்பொழிவில் டாக்டர். சரசுவதி ராமனாதன் கூறியதைக் கேட்டவர் பி. டி. இராமன், பெண்ணைவலம் ]

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

சிறப்பமைக் குழு :

*10-9-90* மற்றும் *11-9-90* தேதிகளில் திருமலையில் கூடிய தி. தி. தே. சிறப்பமைக்குக் குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:

*1990-91* ஆண்டுக்காக அடுத்த ஆண்டு பிப்ரவரி மாதத்தில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் திருப்பதியில் நடைபெறவிருக்கும் இலவச கண் அறுவை சிகிச்சை முகாமுக்கென ரூ. *90,000* ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

## சந்தாதாரர்களுக்கு...

*31-12-90*—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

11, 26, 28, 30 to 32, 37, 38, 57, 72, 113, 118, 126, 132, 142, 145, 146, 150, 154, 170, 250, 254, 255, 259, 261, 263, 266, 267, 268, 279, 282, 417, 420, 432, 439 to 441, 443, 445, 446, 452, 455, 457, 466, 467, 469, 473, 475, 477, 478, 586, 587, 588, 593, 594, 597, 600, 602, 656, 850, 859, 862, 874, 877, 880, 883, 888, 907, 915, 918, 923, 924, 926, 933, 934, 939, 948, 951, 952, 958, 959, 960, 1501, 1572, 1578, 1727, 1998, 2031, 2100, 2102, 2162, 2237, 2238, 2241, 2243, 2278, 2295, 2303, 2307, 2318, 2326, 2329, 2338, 2351, 2354, 2357, 2368, 2373, 2931, 2958, 3272, 3309, 3411, 3653, 3656, 3658, 4038, 4089, 4096, 4601, 4823, 4914, 4928, 4949, 4950, 4952, 4953, 4964, 4965, 4967 to 4969, 4978, 4984, 4993, 4994, 4996, 4998, 5001, 5003, 5006, 5012, 5016 to 5018, 5023, 5024, 5025, 5030 to 5033, 5036, 5039 to 5043, 5045, 5047, 5050, 5055 to 5058, 5060, 5066, 5071, 5073, 5078, 5113, 5412, 5523, 5570, 6467, 6469, 6470, 6472, 6475, 6477, 6478 to 6491, 6495, 6506 to 6522, 6524 to 6533, 6535 to 6560, 6562 to 6609, 6612 to 6662, 6664, 6665, 6667, 6669 to 6699, 6701 to 6711, 6713 to 6719, 6721, 6724 to 6729, 6731 to 6739, 6741 to 6743, 6745 to 6754, 6756 to 6788, 6792 to 6799, 6801, 6802, 6804 to 6818, 6820 to 6826, 6830 to 6834, 6836 to 6839, 6844 to 6849, 6851 to 6868, 6870 to 6873, 6977, 7234, 7448, 7449, 7766

திருப்பதியிலுள்ள அரசு ரூயா மருத்துவமனையின் தோல் பிரிவுத் துறைக்கெனப் புதிய கருவிகளை வாங்குதற்கு ரூ. *10* இலட்சம் வழங்கப்பட்டுள்ளது. ஃ

திருப்பதியில் தி. தி.தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கலைக் கல்லூரி மாணவர் விடுதி கட்டிடத்திற்கென ரூ. *43* இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஃ

சட்டம் மற்றும் வணிகத்துறையில் கல்வி மேற்கொள்ளும் தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் பெண்கள் அல்லது பிள்ளைகளின் கல்லூரிப் பயிற்சிக் கட்டணத்தை தி. தி. தே. மேற்கொள்ள முடிவுசெய்துள்ளது. ஃ

திருமலையில் வருடந்தோறும் நடைபெறும் பிரம்மோத்ஸவத்தின் போது புதியதாக பிரம்ம ரதம் ஒன்றினை ரூ. *45,000* செலவில் செய்ய மேலாண்மை முடிவு செய்துள்ளது. ஃ

திருமலைக் கோயிலினுள் கருப்ப கிருஹத்திற்கு முன்புள்ள ஜெய, விஜய எனும் துவார பாலகர்களுக்காகத் தனித்தனியாக மரமண்டபங்களை அமைக்க ரூ. *23,000* ஒதுக்கப்பட்டுள்ளது. ஃ

அடுத்த ஆண்டு ஆந்திர மாநிலத்தில் ராஜமுந்திரியில் நடைபெறவிருக்கும் கோதாவரி புஷ்கரத்தை முன்னிட்டு, அவ்வூரில் தெலுங்கு மொழியின் ஆதிகவியான திரு. நன்னய்யா எனும் கவிஞரின் திருவுருவச் சிலையினை நிறுவுவதற்காக, அச்சிலையினை இலவசமாக வழங்க தி. தி. தே. முடிவு செய்துள்ளது. மேலும் இப்புஷ்கரத்தை முன்னிட்டு, உள்ளூர் விழாக் குழுவிற்கு ரூ. *20* இலட்சம் வழங்க குழு முடிவு செய்துள்ளது. ஃ

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

செயல்களில் இளைஞர்கள்தாம் பெரும் பங்கு வகிக்கின்றனர் எனும்போது, அவர்கள்பால் கோபம் கொள்வதை விட, பரிதாபமே மிஞ்சுகிறது. கல்வி அறிவு வாய்ப்புப் பெற முடியாத தவிப்பு, பட்டம் பெற்றாலும் வேலை கிடைக்காத மன உளைச்சல், பொருளாதார பிரச்சனைகளால் நாளும் குழம்பி, ஒன்றும் செய்ய முடியாத நடுத்தரவர்க்கத்துப் பெற்றோர்களின் நிலைமை, ஜாதி, மொழி, மதம் பெயரால் மனிதனின் பலவீனமான உணர்ச்சிகளைத் திசை திருப்பி நாட்டின் எதிர்கால மேம்பாட்டினை மறந்து, தங்களுடைய நிகழ்கால பதவி, புகழ், செல்வம் ஆகியவற்றிற்காகக் கொள்கையற்ற அரசியல் வியாபாரம் பண்ணும் சில கெடுமதி அரசியல் தலைவர்கள், தங்களைச் சுற்றியே ஒரு சிறு வட்டம் போட்டுக் கொண்டு, பிரச்சனைகள் வரும்போது மட்டுமே தங்களை இனங்காட்டிக் கொண்டு, மக்களிடையே சமரச சமய எண்ணங்களை தூவ மறந்திடும் ஒரு சில சமயத் தலைவர்கள் போன்றோரிடையே அகப்பட்டுத் தவிக்கும் இன்றைய இளைஞர்களுக்கு நம்பிக்கையும், பொறுமையும், நேர்மையும், தியாகமும், நாட்டுப்பற்றும் மறக்கப்பட்டுவரும் பண்புகளாகவே உள்ளன. என்று இம்மண்ணின் மைந்தன், ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' ''எம்மதமும் சம்மதமே'' ''ஜாதி இரண்டொழிய வேறில்லை'' போன்ற தாரக மந்திர இலக்கணங்களுக்கு ஓர் இலக்கியமாக விளங்குகின்றானோ அன்றே இப்பூமி புண்ணிய பாரதமென்று அழைக்கப்பெறும்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

